# அநுபவாநந்ததீபிகை.

இஃது

ஸ்வாநுபவாநந்த யோகிகளெனும்,

பராசிவையபூஜைசரித்தா பொன்னடிக்காளாகிய

ஞாநாநந்த, நாதமுனிஸ்வாமிகளவர்கள்

மாணாக்கரும்,

திருவெவ்வளூர்

திருவூர் இராஜா அவர்கள்

ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய

ல. நாராயணசாமிநாயகர் அவர்களால்

இயற்றப்பட்டு,

பெரியமேட்டூரா ம-ள-ள-ஸ்ரீ

ந. கிருஷ்ணசாமி ஐயரவர்கள் B. A.

முதல்வகுப்பு

ஆஸ்பிடல் அஸிஸ்டாண்ட்

பெ. இலக்ஷ்மையநாயுடு அவர்கள்

நன்முயற்சியால்,

சென்னை.

அல்பீனியன் அச்சியந்தரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1893.

# சாத்துகவிகள்.

---

శ్రీభాష్యకార ప్రియభాగినేయవంశ్య,
వరదవిష్ణ్వాచార్యకులీన,
శ్రీభాష్య సింహాసనాధ్యక్ష,
ఘటికాశతబిరుదాంకిత, నడాదూరు.

గోవిందాచార్యవిరచిత

స్తుతికారికేయం.

శ్లో॥ శ్రీమన్నారాయణకవి రచితం త్రయ్యన్తబోధ్యసుఖబోధం
గ్రన్థంవిచిత్రపద్యం వాత్స్యోగోవింద కోవిదస్తౌతి.

இதுவுமது.

ஸ்ரீபாஷ்யகார ப்ரியபாகிநேய வம்சய
வரதவிஷ்ணு வாசார்ய குலீன
ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸ நாத்யக்ஷ
கடிகா சத பிருதாங்கித

நடாதூரு

கோவிந்தாசார்ய விரசித

ஸ்துதிகாரிகேயம்.

ஸ்ரீமந்நாராயண கவிரசிதம்
த்ரையந்த போத்ய ஸுகபோதம்
க்ரந்தம் விசித்ர பத்யம்
வாத்ஸ்யோ கோவிந்த கோவிதஸ்தௌதி

ம-ா-ா-ஸ்ரீ, புரசை அஷ்டாவதாநம்

மஹாவித்வான் சபாபதிமுதலியாரவர்கள் மாணாக்கர்

ம-ா-ா-ஸ்ரீ, திருமயிலை

சண்முகம்பிள்ளை யவர்கள் பாடிய

அறுசீர்க்கழி நெடிலடிவிருத்தம்.

சீர்பூத்த வருமறையின் செம்பயனை நாதமுனித் தேசி கேசன்
கார்பூத்த கரத்திநுணர்த் திடநாரா யணசாமி கவர்ந்தெம் போல்வார்
பார்பூத்த பவத்துழலா தனுபவா நந்ததீ பிகையாம் பண்பார்
பேர்பூத்த நூலெனச்செய் துதவினன்மற் றவன்கருணை பேசற் பாற்றே.

பிரமபீட ஸமபத்கிரி

## அச்சுததாஸ ஸ்வாமிகளவர்களியற்றிய

### எண்சீர்க்கழிநெடிலடி விருத்தம்.

வேதமுடி வாயவிழுப் பொருளாஞ் சோதி
விளங்குநிலை யுளங்குளிர விமலர்க் கோது
நாதமுனி யருட்குரவ னுபய பாத
நாடினதை தவம்புரியு நலத்தின் மிக்கா
னீதமுட னுலகமெய்ப் பரிவாற் சொற்ற
னிசமனுப வானந்த தீபி கைப்பேர்
போதமுறு மரும்பனுவ னிகரற் றோங்கும்
புகழ்நாரா யணசாமிப் புனிதன் மாதோ.

அத்வைத ஸபாராஜ வித்வஜ்ஜன சேகரர்

ஸ்ரீமான்

மணிமங்கலம் அத்வைதாவதானம்

## திருவேங்கட முதலியாரவர்களியற்றிய

### அகவல்.

பரமுதன் ஞானமும பண்பென, நிறீஇயினன்
உரனெனச் சொருபத துறுநா. னுண்மை,
யறிவா னந்த மயமோ கூடியான்மா.
சிறிதெனப் பெரிதெனச் செப்புவ ருபாதியான்.
மறைமுடி யுபநிட மாண்பிது. வவ்வழி
கறையறு மாட்சியிற் காட்டக கண்டோன்
மறையடி நாத முனிவழித் தொண்டன்
பெருமிதத நூலகம் பிரமை தீர
நவின்றனன் நாரா யணசாமி நாவலன்
கவின்பெறு வநுபவா நந்ததீ பிகையெனும்
பேதம தகலப் பெருநூ லொன்றிதை
வேதமென றுலகீர் விரைந்துபோற் றிடுமினே.

பிரமபீட ஸபாபத்கிரி அச்சுததாஸ ஸ்வாமிகள் மாணாக்கர்

எலப்பாக்கம்

## இராமசந்திர குருஸ்வாமி தாசரவர்களியற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

சீராய நான்மறையுந் தெரிவறிய பரம்பொருளாத் திகழ்வான் வேண்டிப்
பேராய நாதமுனிப் பெம்மான்றன் றிருவருளைப் பெருமா யோகி
பூராய நல்லனுப வானந்த தீபிகையாம் பொருவின் மெய்ந்நூ
னூராய னைக்குவயப் பெருந்தவத்தோ னுலகுவப்ப நவின்றான் மன்னோ.

ம-ா-ா-ஸ்ரீ, வித்வான் தசாவதானம் பேறை

## ஜகநாத பிள்ளை யவர்களியற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

அருநாத முனிக்களிப்பார்க் கதனூடு மறைமுடிவு மணியாப்போடு
பொருநாத முனின்சொல்லும் விரவனுப வாநந்தப் பொருணூற் சொற்றாய்
வருநாத முனியடிக ளடிபரசி யெவ்வுஞர் வயிற்பா வன்மை
தருநாத முனிலை கைம்மா றருணாராயணசாமி தகயை நீயே.

திருத்துருத்தி இந்திரபீடங் கரபாத்திரசுவாமிகள்
ஆதீனத்துக்குரிய ராசூர் கணக்கு

சச்சிதானந்த சுவாமிகளவர்கள் மாணாக்கர்

## ம-ா-ா-ஸ்ரீ, பு. ஆறுமுகமுதலியாரவர்கள்

இயற்றிய

### வெண்பா.

அநுபவா நந்தமெனு மான்றநீபி கையொன்
றநுபவமா நிற்க வளைந்தான்—தநுவரியா
நாரா யணசாமி நாமமுடை யான்றனது
தீராத வின்பமதிற் றோர்ந்து.

ம-ா-ா-ஸ்ரீ வித்வான பிராயங்குப்பம

## முத்துலிங்கப்பிள்ளையவர்களியற்றிய

### நேரிசை ஆசிரியப்பா.

மலர்மணிக் கடலுடை வைப்பிடை யெழுந்த
பலர்திணி யாணவப் பவக்கான் களைந்தே
யகங்கா ரக்கல் லகலப் பிளந்து
சுகந்தர மனவெளி தோய மோனமாம்
வித்திட் டன்பாம் வீறுநீர் பாய்ச்சிச்
சத்திக் குமாயைப் பறவையைச் சாடிப்
புண்ணியம் விளைந்த போகம் புசித்த
கண்ணிய நாதமு னிக்கட லாழ்ந்து
சுடாவடி வாகித் துரியத் திலங்கும்

நடனர்செங் கோகன கத்தாள் வணங்கி
யல்வழி யென்ப தடாதெனத் தடுத்து
நல்வழி விடாது நடக்குந் தவரும்
சீரொடு பரத்திற் சிறப்புற் றிருந்து
பாரொடு நீரும் பற்றிய லயத்தில்
வெள்ளந் தலைமிசை மேவி நிலைத்தாங்
கெள்ளா முடியி லிருந்தசை யாத
வல்ல சித்தரும் மாறா நாட்டருஞ்.
சேடச் செல்வருந் திறந்தர மறிவி
சேடச் செல்வருந் தெவிட்டா வின்ப
வம்பல மடைவா னற்புதக் காட்சியா
யிம்பரி லின்பமுற் றியாவரும் வியக்க
வாய்ந்த நன்னூலில் வைத்த வேணிபோன்ம்
சொற்பொரு டொடைபல சுவையரி மளிக்கப்
பற்பல கற்பனைப் பாவலர்க் கொருதுணை
விற்பனக் காவென மீறிய பான்மையில்
இருநில முகமென விருக்கும் வேலூர்
திருவிலக் குமையநா யகமே யாகி
வளர்ந்தருள் வளர்த்த மாசிலா மனத்தா
னளந்தபூம் பரந்தலைக் கன்புடன் புணர்ந்த
நாரா யணசா மிநாயக னென்போன்
மாறாச் சுகாநந் தபோதம் வனைந்து
தந்தன னுண்மை தழைக்கச்
செந்தமிழ் வாணருந் தேரக் களித்தே.

ஸ்ரீ - ஸோமசுந்தர மஹரிஷிகோத்ர ஸம்பவராந

குண்டூரு,

## ம-௱-௱-ஸ்ரீ இராகவய்யாவர்களியற்றியது.

(సీ) శ్రీమత్పరమహంస సేవాంతరంగుండు । ప్రజ్ఞానదివ్య ప్రభాకరుండు।
వేదాగమపురాణవిదితుండుధన్యుండు । శేముషీచతురుండు । శ్రీ
కరుండు । సంశయరహితుండుచంచద్దయాళుండు । సత్యవా
క్యుండుప్రశస్తయశుడు । అవ్యయభావసుధాస్వాదతృప్తుండు ।
సర్వభూతసముండు సఖుడు ఘనుడు ॥ అఘవిదూరుండు నా
రాయణకవివరుడు । నిగమసారంబు హృద్భ్రమనిరసనంబు ।
జ్ఞాననిక్షేపగనిలెస్స గరచియించె । ననుభవానందదీపికనభినుతింతు॥

தத்துவவிவேசினி

ம-ா-ா-ஸ்ரீ

பு. முனிசாமிநாயகர் அவர்கள்

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

---

## ஆசிரியப்பா.

உலகுயிர் புரக்கு மொருதனி முதலே
யலகிலாப் பரம்பொரு ளாகுவ தெனவே
நிலவிய ஞான நிதியுடை யொருவன்
தலைமைசே ரிராய வேலூர் தனிமேல
பலகு தனனெனப் பாவலர் மதிக்க
விலகிய விலக்கு மையநா யகனெனும்
பெயர்புனைந் தில்லறம் பேணுறு வோன்வயின்
துயரிரு ளிரிந்தே தூய்மை மல்க
நயனுடை நாரண சாமிநா யகனெனும்
பெயருடைப் பெரியோன் பூமியி லுதித்தே
ஆதவ னெனவே யவனியோர் துதிக்கும்
நாதமு னீஸ்வர னல்லருள் புனைந்து
கலைபல வாய்ந்து கலைவலோர் துதிக்க
நிலைபெறு நீணில நீடு வாழ்த்தத்
தலைமையா மநுபவா நந்ததீ பிகையென
உயர்வொப் பில்லா வுத்தம நூலிதை
அயர்வற யாவரு மனுபவித் தின்பம்
அடைவுறும் பொருட்டே யமைத்தனன் றீஞ்சொல்
நடைதொடை யாதிய நயம்பெறத் தானே.

# பிழை திருத்தம்.

| பக்கம். | தலைப்புகள். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|
| க | அடைக்கலப்பத்து ... | ... | ... | அடக்கலப்பத்து | அடைக்கலப்பத்து |
| கூ | அறிந்தழிவாயெனல் ... | உ | ௩ | புகைகுட் ... | புகைக்குட் |
| உஉ | அபயம் ... ... ... | எ | ௩ | செயிர்வே ... | செயிரோ |
| உஅ | அச்சம் ... ... ... | ச | க | தெர்ந்திங் ... | தேர்ந்திங் |
| | ஷை ... ... | க0 | ச | மறே ... ... | மாறே |
| ரு0 | அன்னைப்பத்து ... ... | ... | ... | ... | ... |
| சுஉ | இயற்கைநிலை கூறல் ... | உ | க | தோடராத ... | தொடராத |
| உ௩ | உபதேச வினாவிடை ... | ச | க | தெகி... .. | தேகி |
| ௩0 | ஐயமகற்றல் ... ... | கசு | ௩ | திருத்தக் .. | திறுத்தக் |
| சு0 | கடைக்கணித்தமை கூறல் | ... | ... | ... | ... |
| ௩ | குரு வணக்கம் ... ... | ... | ... | ... | ... |
| சஎ | குரு சொருபங் கூறல் ... | ... | ... | ... | ... |
| ௩சு | கைம்மாறு காணேனெனல் | ரு | க | யனுத்துணே ... | பணுத்துணே |
| | ஷை ... ... | ... | அ | கேது... ... | கெது |
| | ஷை ... ... | க0 | எ | நினைவரு ... | நினைவறு |
| உசு | சாதனமுறைமை ... | சு | ௩ | நமுடலல ... | நாமுடலல |
| ௩அ | சித்தர்நான்மயக்கொழிதல் | உ | க | பற்றறுந்த ... | பற்றறுத்த |
| | ஷை ... ... | கக | உ | சொல்லிசெய ... | சொற்றியற்ற |
| | ஷை ... ... | ககூ | ௩ | ராகபலியி ... | ராகவுணவி |
| | ஷை ... ... | உக | உ | பின்னுமல-வ ... | பின்னு-ம |
| ச௩ | சீர்பாதவல்லபம் ... | ௩ | ௩ | செத்துசா ... | செத்துச்சா |
| சஅ | சொருபாநந்தக்கொம்மி ... | ... | ... | ... | ... |
| கரு | திரிபகறல் ... ... | சஉ | உ | மிதிருத்தி ... | மீதிருத்தி |
| | ஷை ... ... | சரு | உ | உரங்கிடா ... | உறங்கிடா |
| சகூ | திருச்சாழல் ... ... | க | க | மோமமறுத் ... | மோகமறுத் |
| | ஷை ... ... | ... | உ | சாரர்க்கனை ... | சாரக்கனை |
| ருகூ | திருவுந்தி ... .. | சு | உ | திகழ்லதது ... | திகழ்தலது |
| உக | தெளிந்தது தெளித்தல் ... | ௩ | ச | நெந்தே ... | நொந்தே |
| | ஷை ... ... | சு | ௩ | தத்தஞ் ... | தத்தஞ் |
| உரு | நன்றிமறவாமை ... | ... | ... | ... | ... |
| ௩௩ | நின்றநிலைகூறல் ... | ச | உ | யெதும் ... | லெய்தும் |
| | ஷை ... ... | ச | க | விடத்தேவ்வா | விடத்தெவ்வா |
| | ஷை ... ... | சு | ௩ | ஞெழித்திலே | ஞெழித்திடலே |
| | ஷை ... ... | எ | ரு | சத்தாசுத் ... | சுத்தாசுத் |
| | ஷை ... ... | ... | சு | லெங்ஙன் ... | ளெங்ஙன் |
| ருகூ | நீத்தார்நெறி ... ... | ... | ... | ... | ... |
| சு௩ | நான்முடிபுகூறல் ... | ... | ... | தொளிந்தார் ... | தெளிந்தார் |

| பக்கம். | தலைப்புகள். | பாட்டு | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|
| ௫ | நெஞசறிவுறுததல் .. | ௬ | ௪ | சித்தற்கெ .. | சிததர்கககெ |
| ௮ | பிறவிபழிததல ... . | ௫ | ௧ | விளை .. | விதை |
| | ஷை . | ௪ | ௫ | இருமாப்பு | இறுமாப்பு |
| | ஷை | ... | ௮ | வெண்ணில .. | வெணணில் |
| ௫௧ | புராணசாரக் கலிவெணபா | ௧ | ௨ | பெருஙகருணை | பெருஙகருணை |
| | ஷை . . | ௫௮ | ௨ | வறுமாதை . | வருமாதை |
| | ஷை . . | ௪௭ | ௨ | காணடாளைக் | கணடாளைக் |
| | ஷை .. | ௮௫ | ௧ | ஒன்கதை . | ஒண்கதை |
| ௧௫ | மனன திடம . | | .. | ஆணம .. | ஆனம |
| | ஷை .. | .. | . | திரிய . | திரைய |
| ௧௧ | மெய்க்குரு வியததல் | ௮ | ௬ | தணேஞன்மை | தநோன்மை |
| ௪௨ | வேயிசையூதல் .. . | ௧௬ | ௨ | மூதகுழல் .. | மூதுகுழல் |

# அரும்பத அகராதி.

| | | | |
|---|---|---|---|
| அநகா | பாவமற்றவனே. | ரனைம் ... | வெள்ளி. |
| அயிா | நுணமை. | ாறு .. | முடிவு. |
| அலமுமை | கூவாமை. | உருவகம் .. | ஓரலஙகாரம். |
| அஞா .. | துனபம். | உஞறறல் . | செய்தல். |
| அனுபூதி . | அனுபவம். | ஊறு . | பரிசம். |
| அவ்வியகதம் ... | வெளிப்படாமை | ஏயம .. | குறறம். |
| அநதோ .. | ஐயோ. | ஐம்புலன்-பொறி | மெய் வாய் கண் மூககு செவி. |
| அகம . | மனம்-நான. | | |
| அறிஞா ... | அறிவுடையோர். | ஒளிர்தல் ... | பிரகாசித்தல். |
| அணணல ... | பெருமை. | ஒறுததல் . | வருததல்- வெறுத்தல். |
| அநவரதம் . | எப்பொழுதும். | | |
| அரநதை | துனபம். | ஓத்து ... | வேதம். |
| அணல் . | கணடம்-களம். | கரி .. | சாட்சி. |
| அவம் .. | வீண. | கயவர் .. | மூடா. |
| அமுரி | சிறுநீா. | கடைப்பிடி .. | உறுதி. |
| அரண் ... | கோட்டை. | கனை .. | நிறைவு- நெருக்கம் |
| ஆயம் .. | சுஙகம. | கராளம் .. | தீககுணம். |
| ஆநகம் . | மேளம். | கதம் ... | கோபம். |
| ஆநநம் . | முகம். | கலங்கலன் . | கலங்கான். |
| ஆரணம் . | வேதம். | களேபரம .. | சரீரம். |
| இறு .. | ஒடி. | கா ... | காப்பாற்று. |
| இறும்பூது ... | அதிசயம். | காறு ... | அளவு. |
| இனனல .. | துன்பம். | காசு ... | குற்றம். |
| இப்பி . | கிளிஞசல். | கிறி ... | பொய். |
| இருமை , ... | இம்மை-மறுமை. | கிணகன் ... | அடிமை. |

| | | | |
|---|---|---|---|
| குன்றல் | ... சிறுகல். | நிருபாதிகன் | ... உபாதியற்றவன். |
| குயின் | ... மேகம். | நியதி | .. ஆணை. |
| குணம் குணி | ... பண்பு-பண்பி. | நிருதி | ... பேய். |
| கூர்மம் | ... ஆமை. | பகம் | ... அறிவு. |
| கௌவை | ... பழிச்சொல். | பன்னு | ... பேசு. |
| சரதம் | ... உண்மை. | பண் | ... பாட்டு. |
| சக்கு | ... கண். | பரிச்சேதம் | ... கூறுபாடு-பங்கு. |
| சழக்கு | ... குற்றம். | பவம் | ... பிறப்பு. |
| சுரி | ... சுழற்சி. | பிறங்கல் | ... பெருமை-உயர்ச்சி |
| சுயம்பு | ... தானாகவாதல். | பீதகம் | ... பொன். |
| சுவகதம் | ... தன்னுளடக்கம். | புனிதம் | ... சுத்தம். |
| செறல் | ... வெறுப்பு. | புரிவு | .. அன்பு ஆசை-கட்டு |
| செயிர் | ... குற்றம். | பைதல் | ... பையன்-துன்பம். |
| செறிவு | .. நிறைவு—நெருக்கம் | பொறுத்தல் | ... சுமத்தல். |
| சேர்குவல் | ... சேருவேன். | பொன்றல் | ... சாதல். |
| தராதலம் | ... பூமி. | மறுக்கம் | ... குற்றம். |
| தத்துவம் | ... உண்மை. | மறுகலை | ... சுழலாதே. |
| தமம் | ... இருள். | மன்று | ... ஆகாயம். |
| ததைய | ... நெருங்க. | மண்டு | ... நெருங்கு. |
| திருதி | ... துணை. | மறம் | ... பாவம். |
| திமிரம் | ... இருள். | மூசிருள் | ... மொய்த்தவிருள். |
| துய்ப்பாய் | ... அனுபவிப்பாய். | மோடி | ... பிணக்கு. |
| துன்[illegible]னர் | ... நெருங்கினர். | விரகு | ... உபாயம். |
| துவ[illegible] | ... கட்டு. | விண்டு | ... விஷ்ணு. |
| தூய்[illegible] | .. சுத்தம். | விரையகிலார் | ... விரையார். |
| தெருள் | . தெளிவு. | விது | ... விஷ்ணு. |
| நகம் | ... மலை. | விபு | ... கருத்தா. |
| நபாந்து | ... விளங்கவில்லை. | வெண்டேர் | ... கானல். |
| நசை | ... ஆசை. | வேளாண்மை | ... ஈகை. |
| நிர்வாணம் | ... மோக்கம். | | |

## அவையடக்கம்.

முன்பி னிலையாத மூடமதி கொண்டழியாத்
தன்மையன் றன்மைமுற்றச் சாற்றுவரா—ரென்சொற்
பிழையாய வெண்ணிற் பெரியோரிந் நூலிற்
கழிவ வெவை நிற்பவெவை காண்.



கணபதிதுணை.

# அநுபவாநந்த தீபிகை.

## அடைக்கலப்பத்து.

உலகொடுயிர் பரமாகி யொளிருமொரு பொருளை
யுவமைகடந் தப்பாலுக் கப்பாலாம் பொருளைக்
கலகமிடுங் காமாதி பகைஞர்வலை பட்டுக்
கலக்கமுறு முயிர்ப்பறவை களைகளையும் பொருளைப்
பலகலையின் முடிவின்முடி வாயிலகு பொருளைப்
பாவாபா வங்கடந்தோர் பங்கிலுறை பொருளை
யலகறுமா நந்தநிறை வேவடிவாம் பொருளை
யருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (க)

அருவாகி யுருவாகி யருவுருவு மாகி
யன்றாகிச் சாக்கியா மறிவாகும் பொருளைக்
குருவாக வந்தடிமை கொண்டெளிமை நீங்கக்
குணங்குறிக ளறுதனைக் கோடன்முறை காட்டித்
தெருளாக்கு மொருபொருளை யன்பரக மூறுந்
தித்திக்கு மழிவிலாத் தெள்ளமுதாம் பொருளை
யரியாகி யரனாகி யயனாகும் பொருளை
யருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (உ)

என்றுமொரு படித்தாகித் தன்னையன்றி வேறொன்
றிலாதிருக்கச் சோதனையி லெஞ்சிநிற்கும் பொருளைப்
பொன்னையன்றிப் பூடணங்க ளுருவொடுபே ரல்லாற்
பொருளிலா வாறேபோற் புனிதமயப் பொருளை
யென்னையன்றி வேறாகா திலகிடுமெய்ப் பொருளை
யிரவுபக லறநினைவார்க் கின்பமயப் பொருளை
யன்னையொடு தமர்தார மாகவலர் பொருளை
யருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (௩)

கண்ணாகிக் கண்டனக்குக் கண்ணாகிக் காண்பான்
காட்சியாங் காண்பொருளு மாகியவொண் பொருளை
மண்ணாதி பூதபர வணுக்களையாண் பெண்ணாய்
மனிதரொடு தேவர்விலங் காதியெனக் காட்டி

யுண்ணாட வைத்தமா யையைமாய மாக்கு
மொருபொருளாம் [illegible]பொருளை யுண்டிலையாம் பொருளை
யண்ணாவென் னரசேயென றற்றவரு பொருளை
யருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (௪)

ஒன்றாகிப் பலவாகி யொப்புயர்வு மில்லா
வொளியாகி வெளியாகி யோதரிய பொருளை
நன்றாய தன்றாகி நானாயின் றவனாய்
நானாகி நீயாகி நாதமொடு விந்தா
யன்றாகி யாமலவெ னும்பொருளு மாகி
யதீதமென் றருமறைக ளாய்ந்துணா யிழக்கார்க
கன்றால மர்ந்தருள வந்தகுரு வடிவா
ம[illegible]ருவை மருளகமே யடைகவடைக் கலமே. (௫)

விண்ணாதி தருஞான விண்ணாகும் பொருளை
வேதாந்த வாச்சியத்திற் கிலக்கியமாம் பொருளைத்
தண்ணாருஞ் சாந்தமே வதையாகும் பொருளைச்
சராசரப் படிவங்க டங்குபடப் பொருளை
யெண்ணாத வெண்ணிமய லானுள்ளு டைந்தாங்
கிடைந்தார்த மைச்சேர வெளிநின்வரு பொருளை
யண்ணலாம் பொருளேதிங் கதுவாகும் பொருளை
பருளுருவை மருளகமே யடைகவடைக கலமே. (௬)

துவ[illegible] [illegible]ந்: திரைமோதி மூவாசை நீரான்
தூய்[illegible] [illegible]ா மாயையெனு மாழமுடைத் தாய
தெரு கரம்வறள வடவையன லாகுஞ்
நகம் [illegible]தாதயப் பொருளைமன விருளகல ஞான
நபாரு [illegible]ன பொருளவித் தாதேகம் வீழ்வா
னழுந்துரிய வருளைமல மற்றார்தந் தெருளை
யநகனச் சுதனமல னும்பொருளை நீங்கா
வருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (௭)

[illegible]வலபுல யெண்குணமு மறிவிக்க வூறாய்க்
களேபரமே யிடமாகிக் காதாகி யோசைக்
கிடனான சுவையாறு மறிநாவு மாகி
யிருகந்த முணருமூக் காகியை வண்ணந்
திடனாக வறியவொளி கண்ணாகி மனமாய்ச்
சீவனாய்க் கூடத்த னாய்ச்சிவனு மாகி
யடியாய சச்சிதா நந்தபர மாகு
மருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (௮)

[illegible]வாமை யிறவாமை பெயராமை பெற்றுப்
பிறங்குமன மாயையவை யேற்றிட மாட்டி
விறலோடு கண்டுகளி கொள்பொருளை வேத
விதிநிட்ட தங்களறு வித்தகரு ளத்திற்

கறனுய றப்பயனு மாகியழி வில்லா
வகண்டசின் மயமாகு மாதியாம் பொருளை
யறயாவை யும்விடுத் தார்தமை யறுத
வருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (க)

கருணைபொழி கருமுகிலைக் கருணைவா ரிதியைக்
கருணுல யப்பொருளைக் களைகணும் பொருளைத்
தெருணயந் தாரையரு ளாக்கவரு பொருளைத்
தேஜோன்ம யப்பொருளை நாவார வாழ்த்திப்
பொருணயந் தார்க்கதே யாகியழி வில்லாப்
போதம்வேண் டினரைமெய்ப் போதமய மாக்கு
மருணறு யஞ்ஞான திமிரமிறு பொருளை
யருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே (கo)

அடக்கலப்பத்து முற்றிற்று.

ஆக செய்யுட்க[illegible]

## குருவணக்கம்.

இகபர மெங்குநி றைந்தொளிர் பொருளே
யிதுவென வெவருமி சைத்தற் கரிதாஞ்
சுகபரி பூரண முமலவி நாசச்
சுடர்கெழு கனசித் ஜோதிமெய் யடியா
ரகநக மீதுத யஞ்செயு ஞான
வருணனே பொதிகைம லைக்கர சருடேர்
பகவனே பவபய மறுபெரு வழிதேர்
பகமரு ளாரிய பதமலர் சரணே. (க)

முத்தியி னுருவே மூவா முதலே
முப்புர முச்சக மூசிரு ளகலச்
சித்துரு வாகித் திகழ்தின கரனே
சின்மய சிவசங் கரசீ பதியே
நித்த நிராமய நிருமல நினைவார்
நினைவக லாநிரு பாதிக னேசத்
பத்துறு பொதிகை மலைக்கர சருடேர்
பகமரு ளாரிய பதமலர் சரணே. (உ)

ஆயிர நாமா வசலா வமலா
வத்விதீ யவந காவச் சுதனே
பாயிர மோதப் பழமறை யஞ்சும்
பங்கஜ பதபர மாத்மப யந்தீர்

மாயவ மாசே னனேமுக் குற்ற
மறுத்திடு பொதிகை மலைக்கர சருடேர்
தூயவ னேதுரி சறுதுரி யஞ்சேர்
சூழ்ச்சி யளிப்பவ துணைமலர் சரணே. (௩)

அண்டரு மமரரு மறிதற் கரியா
யழுதழு தலமரு மடியர்க் கெளியாய்
தொண்டரை யுண்டவர் கண்டன மென்றுச்
சொல்வகை யறமனம் வாக்குயிர் சோரக்
கண்டன வெவையுந் தன்னுரு வாக்கிக்
காலமி றந்தொளிர் கோலம தருளும்
பண்டைய னேபழ மறைபொருண் முடிவாம்
பகமரு ளாரிய பதமலர் சரணே. (௪)

சிந்தையு ருக்கொடு ஐகவடி வாகித்
திகழ்சிற் சுகவடி வேயடி யவர்தம்
புந்தியி லின்னமிர் தப்பெரு வெள்ளம்
புகவிடு வோயுட லுயிர்பொரு ளாதி
தந்திட வல்லா யவைகொள வல்லாய்
தன்னிய னேபொதி கைக்கர சருடேர்
பந்தமி றந்தா நந்தாம் புதிதோய்
பகமரு ளாரிய பதமலர் சரணே. (௫)

புறமக மெண்டிசை மேல்கீ ழென்னப்
புகலிட மதினிறை பொருள்களு மனுவா
யறநெடி யாயள வைகளறு நிலையாய்
யாவையு மாயன் றுஞ்சித் ஜோதி
மறமலி நெஞ்சற வாழியி னாழ்த்து
மாண்புடை யான்பொதி கைக்கர சருடேர்
செறலறு மறிவா நந்தம ளிக்குந்
திறனுடை யோய்திரு வடிமலர் சரணே. (௬)

பூதப் பொருளும் பொறிபுல னுடலும்
பொய்யறி வாஞ்சீ வனுமிரு வினையும்
வேதமு மதிலுரை விதியும் விலக்கும்
விண்ணுல கொடுபா தலமதி லுறைவோர்
போத னரன்மா லவர்தரு கதிகள்
பூரண வெளிதரு பொய்ச்சித் திரமென்
றோத வெழும்பொதி கைக்கர சருடேர்ந்
துயரறி வருளுப யபதஞ் சரணே. (௭)

நாய்நரி பேய்கழு காதிவி ருந்தா
மாறுடல் சோறுதி ரிந்தி லொருகூ
றும்மதி யாதிது நீயென விதனை
யாக்கின னுளனவ னடிதொழு வெனவே

பேய்மத வாதுபி தற்றுவ ரறியார்
பிரக்ஞா னம்பிர மமுமல கெனுமென்
ருய்ங்கர் பொதிகை மலைக்கர சருடேர்ந்
தறிவரு ளாரிய வடிமலர் சரணே. (அ)

எதுவல் குயிர்பர மாய்க்கா மாதி
யெண்ணறு தீக்குண மாய்நற் குணமா
யதுவவ னவளவை யாய்முப் பொழுதா
யலரிமு தற்கோ ளமரர்கண் முனிவர்
விதுபது மனரன் றிசைபல கலையாய்
விளைபய ஞயொன் ருகிவி ளங்கு
மதுவறி வதுநீ நானென வருளெம்
மத்தநி னம்புய வடிமலர் சரணே. (௯)

அறிவறி படுபொரு ளெனவிரு பொருளே
யலதில யறிவுற முறிபொரு ளுளதே
லொருபொழு துளதொரு பொழுதில தாகி
யொழிவதெ னறிவிலை யெனிலிவை யுணர்த
லிருபொழு துங்கரி யாகவி ருந்திங்
கெதுவென வருள்பொதி கைக்கர சருடேர்ந்
தறிவுள தயலிலை யதுநீ நானென்
றருளிய வமலநி னடிமலர் சரணே. (௧௦)

தனையல தயலணு வுளதெனு மளவுந்
தான்மா ளாதும னங்கெடு மளவும்
வினைகழி யாதத னற்சுக துக்க
மேவிடு முயிர்நிலை யாமத ஞனீ
யெனைவிட பரமா ணுவுமிலை யெனவே
யெண்ணுக மனமறு வகையிது விடினே
கனமய லொழிவழி யிலையென வருளெங்
கற்பக மேபூங் கழலிணை சரணே. (௧௧)

குருவணக்கம் முற்றிற்று.
ஆக செய்யுட்கள் ௨௧.

---

# நெஞ்சறிவுறுத்தல்.

## மாதரைப்பழித்தல்.

அநவரத முந்துயரி லாழ்குவதென் னெஞ்சே
யாதுவரி லின்புறுவை யாதனது பிரியங்
கனதனநுண் ணிடைமாதர் போகமெனி லதினீ
கண்டதென் காமதுயர் நீக்கமெனி லதுபொய்

தினமனுப வித்திடற் குடைவதென் கெடுவாய்
தோலென்பு ரோமஞ்சு கந்தரா பிறமை
கனகிருமி வாழுமல பாண்டமிதை விட்டுக்
கனவினீ சுகமுறற் கண்டுதெளி வாயே. (௧)

கற்புடைய ரேற்சபிப் பார்கற்பி லாது
கண்டவரை யணைவர்பாற் றொண்டுசெய வழகோ
நற்குலப் பெண்ணொடெனி லெதுகாறுந் துய்ப்பாய்
நமன்வருநகை யறிவையோ நாசமுறு தேகங்
கற்பவரை யொழியாத சித்தனல வேநீ
கமலாச னனுமலாய் கண்டசுக மலவோ
வற்பமென லறியாய்கொ லாகெடுவை நெஞ்சே
யாதுபயன் மாதரா ளோதலறி யாயே. (௨)

மண்ணீரை யலதுபுற் பூடாதி யுண்டோ
மகன்மாடு மாதராய் மற்றவைகண் மாறக்
கண்ணுர வேகண்டு காதலவைப பதனுற்
காமாதி குணமெய்த லேமாறி டாதே
பெண்ணேவ ளரசர்சே வகராவே சேனை
பிதாமகன் முதற்சிலை யணுக்கூட்ட மலவோ
வுண்ணுடி னுறவுபகை தமர்தார முண்டோ
வொருங்குபட னுண்டெனவு ளொழியாத மயலே. (௩)

யாக்கையைப்பழித்தல்.

நெஞ்சேயி தென்கொடுமை பலதுயர்க் கிடனாய்
நின்றுகண மேனுநிலை நில்லாது மாறு
நஞ்சாகு முடலையமு தாமெனவு முணர்வாய்
நடுக்கமறு நகைதரக் கொண்டதெது மரணத்
தஞ்சாமை யாபசியி லலையாமை பிணியா
லலறாமை குளிர்வெப்ப மண்டாமை முடிவிற்
றுஞ்சாமை சாம்பராய்த் தோயாமை யன்றே
சுகந்தரா திவைதூங்க நிலையாமை தெளியே. (௪)

ஒன்றுகே ளெனஞ்சே யுடற்கலைவு காம
மோயாத பசிநோய்க ளொன்றுபி னெவ்வொன்று
மென்றும்வரு மேலூக்க மெதுகாறு மொழியா
திதற்குரிய செய்வைசெய லெப்பயனு னக்குப்
பொன்றுதி ருக்குமெனி னன்றுமி தின்றே
பொறுத்துடலை யாவதென் போயொழிக விடவோ
யின்றேனுங் கற்பத்தி லேனும்விட லரிதே
விறப்பொடு பிறப்பவகி யொன்றுமக லாயே. (௫)

பொருட்சுகப்புன்மை பழித்தல்.

பயனுவ தேதகமே யுண்டவைகண் மலமாம்
பார்த்தவோ சாணுது பாழாந்து யின்று
லயலால்வ ருஞ்சுகம நித்தியமே யன்றோ
வயன்முதற் றேவர்சித் தற்கெனினு மொக்கும்

வியனாரும் வீடுவரு வகையேது தோன்ற
விரைந்தழி பொருட்கழுது வீணாக லழகோ
பயமாதி சேராத வகைகேளா னெஞ்சே
பகற்கனவி தென்றுலகி னைப்பார்த்து நில்லே (௬)

## விடயவிச்சையைப் பழித்தல்.

ஓயாது பொருளாசை கொண்டலைவை நெஞ்சே
யுடற்கணம் வாழ்வதறி யாயுடல்வ ளர்க்க
வேயாது பெறினுமறு சுவையுமுண் டிலையோ
வேறெதனை யுண்பர்நிதி சாலவுடை யோரும்
நாயாக வலைவதென் னேவுளது போமோ
நமக்கென்ன மேமுடியி னுதனிலை யாமால்
காயாது விழையாது கணம்விட்டு நிற்கக்
கணுவாம்பொ ருட்சுகங் கண்டுநீ தெளியே. (௭)

வாழ்வெனுத் தாழ்வெனுப் பேதமய லாகி
வருந்தலேன் மனதேயி ருந்தபடி யிருநீ
வாழ்வேது தனதான்ய மனைமக்க ளேயால்
வருந்தா வுடற்கொண் டிருந்தாள்வ தெனினோ
தாழ்வா மெமன்வருத லுண்மையிது வன்றித்
தனஞ்சிலவு செயினும்விடி னுங்கெடுதி யற்றே
தாழ்வாகு மனைமக்க ளுரைகொளாப் பொழுதுந்
தனக்குமுன் பின்னவர் தனிப்பதையு முணிலே. (௮)

## பகிர்முகப்பரிபவம்.

தடையேது மின்றியஞ் சாதுலையு நெஞ்சே
ஜகந்தேக முயிராதி தந்தவனு மிலையோ
படையாதி யற்கைதர வந்தவெனி லஞரேன்
பாழ்படுத் தனுமதே தாழ்வடைத லெவனோ
வுடையா னொருத்தனுள னேலவனை நாடி
யோயாம லழுதுதுயர் மாயாத தென்னே
கடையாய வுன்போல்வ ரிலையாய்ந்தி டாது
கரையறுது யர்க்கடல்க விழ்ந்துவிழு வாரே (௯)

எதுகருதி நெஞ்சேயுன் வாணுட்க ழிப்பா
யெங்கிருந் திங்குவந் தனைபோத லெவிட
மதுமறந் தயல்வியக் கச்சிலது கற்றே
யருந்தற் பொருந்தற்க லைந்துபொரு டேடி
மதுவுண்ட வண்டென மயங்கின்மரு ஜனனம்
வராதோவ ராதெனின் வரலெனிச் சனன
மிதுதந்த வன்பினுந் தரிலேது செய்வா
யெப்படியி ழைப்பமிது செப்புகவி னாந்தே. (௧௦)

நெஞ்சறிவுருத்தல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௬௧.

# பிறவிபழித்தல்.

---

கலகயமன்விடு தூதர்பிடித்திரு கைகள்சலித்தன ரால்
கருவளரச்சும வாபெறுநோயில்க ருத்தனைநொந்தன ரா
ல[illegible]றுதந்தையர் பெற்றுவளர்த்தழி யாத்துயர்கொண்டன ரா
லரிவையர்பூண்மங் கலணுணழிவா லழுதுசலித்தன ரால்
பலமுறைநரகுபு குந்தடைதுயரயல் பார்த்துவெறுத்தன ரால்
பந்துஜனங்கள் சிநேகர்சிசுககள் பதைத்துநடுங்கின ரா
லுலகமுதித்திடு நாண்முதலுடலை யொழிந்துபொறுத்திட லா
லோகெடுவாய்பல பேர்கணடுங்கவு ருக்கொளவென்னமு கே.(க)

கருவளர்பைச்சாண் மூழநீயதில்கட் டுண்டுவருந்தினை முன்
கழிபொருளொக்கநெ ருக்குண்டுடல்வெளி காணவயர்ந்தனை பின்
றருசிறுநீர்மல மாதிபுரண்டுதெ வழ்ந்து நடந்திடு நா
டனைமிசைவீழ்ந்தறை யுண்டைம்பருவந் தனிலனைதந்தைமு னுன்
குருவிவர்முனிவுக் கிடனுய்நொந்தனை கொம்பனையார்மய லாற்
சூடழிநோய்பழி பகையச்சங்கொடு கோரகுடும்பியு மாய்ப்
பெருதுயர்கண்டனை யைம்பொறிகெடுமூப் பினின்மரணத்துய ரென்
பேசுக வறிவாய் பேதாய்பயனெது பிறவிவிரும்புவை யே.(உ)

உண்டிடுவினைசழை காய்கனிசருகல துண்ணலைபட்டடை நூ
லுடையொடுரோமத் துடைநாரல்ல துடுக்கலைசந்தகில் சேர்
தண்பனிநீர்நா னம்புழுகாதிய தடியுடல்பூசலை நீர்
தனிலலர்கொடிகோ டலர்மலரலதுத ரிக்கலைமணியணி பூ
ணுண்ணிடைமாதர்மு யக்கலநுறுகிலை நூறுகம்வாழுகி னு
நுண்ணறிவோர்பெறு பேரின்பச்சுக நுகரலைபிறவிதொ றுங்
கண்டதைகண்டுண் டதையுண்பதிலெது காண்குவமொழியகி லாய்
கண்கொடுபடுகுழி வீழ்வதுநன்றல கற்பனைவிட்டக லே. (௩)

நதிகடல் வாவிகள் விதியிலமிழ்ந்தனை நாடவராமனீ யோர்
நன்னேம்போம்பினை மந்திரபூசைந யந்துமுடித்தனை பல்
பதிவலம்வந்தனை புலிமான்றோலிடை பன்மணிபூண்டிரு மாப்
பாகவிருந்திரு கண்களைமூய்த்து பயின்றனையோகுக ளைப்
பதிசநிநிசுத ருடலணிமாதிப யன்பெறவேண்டிய லாற்
பாழ்படவிகபர வாழ்வுடனிதியென பவமறுதற்கல வே
யிதிலெதுபயனிக பரசுகநிலையல வெனுமிருமறையுடல் வாழ்
வெண்ணில்கழிந்த தறிந்ததைவேண்டுவை யென்னிதுவுன்னினை
[வே. (௪)

கௌவைமறந்திலை கர்வமொழித்திலை கன்மம்விடுத்திலை யால்
காய்சினம்விட்டிலை யுடல்பொருள்குலவபி மானங்கழலலை யால்
வெவ்வுணாதந்தெம் மதமேபெரிதென வீண்வாதாடுவை யால்
வீணர்தமைப்புக ழாமெய்ஞ்ஞானிமுன் வீம்புகள்பேசுவை யால்

பவ்வநெடுந்திரை சூழ்புவிமேற்புகழ் பரவவிரும்புவை மெய்ப்
பத்திசிரத்தைநி ராசைவிசாரணை பற்றலைகற்றதி லென்
னெவ்வலுகோசத மெவ்வுடலோசத மெம்மதமோசத நீ
யெண்ணறுபிறவியெ டுத்தழிவித்ததை யெண்ணலையென்னிதுவே.

பிறவிபழித்தல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௩௬.

---

## அறிந்தழிவாயெனல்.

இறப்போமென் றறிவாயெண் ணிலரிறக்கக் கண்டா
யெவர்பிழைத்தா ரேனழுத லென்றயலுக் குரைப்பாய்
துறப்பரே லுயிர்தமர்க ளார்த்துமறந் தழுவாய்
துடிதுடித்துக் குலைநடுங்கித் துஞ்சுமுனே யுடலை
மறப்பதுபுண் ணியமென்பாய் மகான்கதைகட் படிப்பாய்
மறுகணத்தின் மண்பெண்பொன் மயலதனுன் மாழ்கித்
திறப்படுவா யுலகுசத மெனவேயை யையோ
திரைக்கடல்வீழ் திரணமொத்தாய் செப்புவதென் னுனக்கே. (௧)

விரைந்திடலேன் விதியிலுள்ள தேவருமென் றுரைப்பாய்
வீணர்சொல்லை மெய்யெனவீ டும்பொருளுந் தோற்றே
கரைந்திரச வாதபித்தே றிப்புகைகுட் பட்டுக்
கண்ணிழந்து மதியிழந்து கையிரண்டு மேந்தி
யிரைந்தழுதிச் சகம்பேசி யிஞ்சியுண்ட குரங்கா
யிடுவர்கைக்கே மாந்தவரா விடர்துலைக்க வலைவாய்
சிரைபுரைவா யவர்கொடுத்த லவர்கதியே யன்றோ
சீச்சீநீ யறிந்து கெட்டாற் செப்புவரா ருனக்கே. (௨)

தேவரௌவை சிவசமய வாசிரிய ரடியார்
திருந்துசட கோபர்முத லாழ்வார்கள் சித்தர்
மூவர்சொன்ன கீதைமுத லூற்படிப்பாய் பிறர்க்கு
மொழிந்திடுவாய் குருவாக முன்வினைவா யல்லால்
யாவரெனைப் போன்மடைய ரென்றகத்திற் றிரும்பா
யானெனது மெனதெனது மெள்ளளவுந் தவிராய்
கோவணத்தின் மேற்குறையுந் தலைமேலாக் கினையுங்
குறுகாதென் பாய்துணியாய் கூறுவரா ருனக்கே. (௩)

ஆசைபல வருந்துயருக் கடிபீட மென்பாய்
யாதுவந்து மடங்காதே யார்கொடுப்பா ரென்பாய்
காசைநாந் தேடினமோ நமையதுதே டிற்றோ
கடற்கரையிற் புரண்டாலுங் களேபரங்கொண் டதுவே
தூசதிக மொட்டாதென் றெவரிடத்தும் புகல்வாய்
துரும்பளவா சையையும்விட்டுத் துணிவமெனத் துணியாய்
வேசையர்க ளாசையொக்க நேசம்வைப்பாய் சிவன்மேல்
வெளிவேடம் பரமசுகம் விளைத்திடுமோ நெஞ்சே. (௪)

துண்டுபல் வாமெலும்பு நரம்புதசை கூடித்
தோலாலே மறைந்தமல பாண்டவுட லதுமேற்
கொண்டிருப்போ நாமுமென வறிந்திருந்துந் தனிலுங்
குவலயத்தி லுள்ளாரைக் குறையுனலென் னெஞ்சே
பண்டிதத்தால் வேடத்தால் பணத்திலுயர்ந் ததனுல்
பழயமல பாண்டமொரு பவித்திரம்பெற் றிலதே
யண்டர்பிரான் றருமுயிர்க ளனைத்தையுமொன் றென்றே
யறிவதுநன் ஞானமென் றுன் னகங்காரந் துலேயே. (௫)

இருப்பதுபொய் போவதுமெய் யாதிருந்து மென்று
மெவரிருந்து மென்செய்வா ரெமன்வருங்காற் றேடும்
பொருட்கொடுத்துப் பிழைப்பாயோ தமரையனுப் புவையோ
பொய்யுரைத்தாற் சென்றிடுமோ பிற்கணத்தே வருவே
னுருக்கம்வையு மையாவென் றழுதும்விடு வானோ
ஆட்டிவளர்த் திடுமுடம்பி னொடுகொடுபோ கானே
செருக்கெதுவோ நிலைமையில்லாப் பொருட்கழுவாய் நெஞ்சே
சிச்சிநீ யறிந்துகெட்டாற் செப்புவரா ருனக்கே. (௬)

பெண்ணாசை யாலழிந்த பேர்கடமைக் கண்டாய்
பெரும்பார தக்கதையி ராமர்கதை யறிவா
யெண்ணும லவர்பிறகே நாயதுபோ லலைவா
யிருந்தபொரு ளீந்துலக ரேசிடவா யறவாய்
புண்ணாதி தாவழிந்தாய் வைத்தியர்பின் பற்றிப்
பொருட்கொடுத்து வாய்ப்பறகள் போமருந்தை யுண்டாய்
மண்ணவா ராசைகன விலும்விரும்பே னென்றாய்
மறுத்தவர்வா யலைக்காப்பாய மருந்துனக்கென் னெஞ்சே. (௭)

துறவிகளுக் கரசனொரு துரும்பெனுஞ்சொற் பொய்யோ
துணிந்தார்க்குத் துக்கமில்லை யெனலறிநீ மெய்யோ
பிறந்திறவா வுயிர்க்கரந்தை யுண்டெனலை யையோ
பெயர்சொல்லும் வாழ்வுதாழ் வதைநினைவாய் நொய்யோ
ரரன்பிரம னரிமுதலோ ரடைந்தனரே வூடற்சொண்
டார்சிறுமை பெருமையடை யாதிருப்பார் கலங்கேன்
மறமலிந்த நெஞ்சுடையார் வார்த்தையினு னெஞ்சே
வருவவர வாராத வரலொழிக வெனவே. (௮)

உள்ளபடி நாம்பிழைக்கும் வகையெதுவென் றுன்று
யுணர்ந்தவரைப் பரிகசிப்பா யுட்கருத்தை மறைத்துக்
கள்ளவந்த னம்பூசை ஜபதபமேற் காட்டிக்
கருத்தறியா ரிடம்பகட்டிக் கண்டவர்பா லனுகா
யெள்ளளவும் வாக்குமனங் காயமொருப் படவிங்
கெத்தொழிலு முஞற்றுகிலா யெப்பயனெங் குறுவாய்
பொன்னவுடற் கேயழுவா யான்மசுகம் பேணாய்
புறந்திரிவா யகமடங்காய் புகலுவதென் னுனக்கே. (௯)

இல்லையது[redacted]றைவேயோர் வடிவாகும் மனமே
யானு் மெங்குதித்தா யெவர்பொருட்டுக் கலைவாய்
வல்லையல்லை யகிலாண்ட கோடிவகுத் தளித்துள்
வாங்கவல்லா னியதிதனை மறுத்தனுவிங் கசைக்க
நல்லைநீ யென்பொருட்டே துயருறுவா யெனிலோ
நம்புமெனைக் கைவிடுத்துச் சுழுத்தியிலெங் கொழிவா
யெல்லையில்சத் தாமெனினீ பிறந்திறப்பை யுணர்வா
யினியேனுந் தொழிலறவென் னிற்கலந்து சுகியே. (௧௦)

அறிந்தழிவாயெனல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௪௯.

## மெய்க்குரு வியத்தல்.

அல்ல றீர வறிவைய ளித்துப்பே
ராசை தீர வமுதெனு மோர்மொழி
சொல்ல வல்ல வருட்குரு தாடலைத்
தோயக் கொண்டு பிறப்பறு நெஞ்சமே
நல்ல யோகஞ் சிதம்பரச் சக்கர
நாச மின்றி யுடனிலை மார்க்கமு
மில்லை யோதரு வோநொடிக் குள்ளெனு
மீனர் சொல்விடு ஞானந்த ழைக்குமே. (௧)

ஏதம் யாவுங் கெடுத்துக் கெடாதபே
ரின்ப மேதர வன்புரு வாய்வரு
நாதன் சற்குரு தாடலைக் கொண்டது
நானெ னத்திட ஞய்நில்லென் னெஞ்சமே
காத லித்திட வேமறை வஞ்சனங்
கற்ப ழிக்கும் வசியந் திமிர்தலு
மோத வந்திடு மென்றுபொ ருட்கொளு
மூத்த னைவிட் டொழித்துப் பிழைத்திடே. (௨)

என்று மோர்படித் தாகவி லகிடு
மேத மில்சக ஜாநந்த முன்னுரு
நின்றி டென்றப வாதம ருட்செயு
நித்தி யக்குரு தாடொழென் னெஞ்சமே
பொன்றி டச்செயு மாரணம் பித்துகொள்
பேத னம்வித்து வேஷணம் மோகன
முன்ற னக்கருள் வோங்குறை யாதெனு
மூடர் கைவிடு கேடுத விர்க்கவே. (௩)

அறிவை யன்றி யகிலம் விளங்குமே
லாநந் தப்பிர மமது வங்கனே
வெறிய வேறற வில்லவை நீயெனும்
வேத வாரியன் றாடொழென் னெஞ்சமே

குறிகள் வைத்திது சண்முகி சாம்பவி
    கூடு விட்டொரு கூடுபு கச்செயு
நெறிய தென்றதி லேனுவி லேத்திடார்
    நீசர் கைவிடு தேசுறி கழுமே. (ச)

அணுவி னுக்கணு வாகிய கண்டமா
    யந்த மற்றகு ருதுரி யந்தனைக்
கணுமு திர்ந்த கரும்பெனக் காட்டிய
    கற்ப கக்குரு தாமொழென் னெஞ்சமே
முணுமு ணுத்துச் சபித்திடு வோநம்மேன்
    மோடி செய்தழிந் தார்கோடி யுண்டென்றெங்
கணுமூ ரைத்தச்ச மாடுங்கு றும்பரை
    யஞ்சி டாதவர் நெஞ்சைப்பி ளந்திடே. (ரு)

சுருதி யுத்தி யனுபவத் தாலுனைச்
    சோர்வி லாப்பரி பூரண மாக்கிடத்
திருதி யாக வெழுந்தருண் மாரிபெய்
    தேசி கன்றிருத் தாமொழென் னெஞ்சமே
நிருதி மந்திர மீதுச பித்திட
    நிச்ச யமுல கோர்தத்தஞ் சிந்தையிற்
கருதும் யாவும் வெளிப்படை யாமெனுங்
    கயவர் கைவிடு காலமி ருக்கவே. (சு)

மாயை யில்லை மனப்பந்த முத்தியும்
    மைந்த நீசித் திவைசட முன்னுரு
சாயை யோர்முத லேலிவை யுண்டெனுச்
    சங்கை தீர்த்தவன் றுமொழென் னெஞ்சமே
பேயை யேவற் செயும்படிக் கேவுவன்
    பேழந் தூர்க்கையென் கைவச மென்றுல
காயந் தேடுமெ பூம்பர்கை விட்டுநில்
    லந்த மில்பர மாநந்த மாவையே. (எ)

வைது நிந்தை வழங்கிவெ றுக்கினும்
    வாய்மை தந்து மறக்க மறுக்கவே
செய்து சிந்தை மகிழுமென் னையனுந்
    தீன பந்துவின் றுமொழென் னெஞ்சமே
நொய்து பேசலும் பாம்புபு விகடன்
    ஞென்மை யல்லதோர் நோன்புஞ் செயாச்சிறு
பைத லாய்ப்பிறர் பைதல டைவகை
    பன்னு வார்மொழி தன்னையொ ழித்திடே. (அ)

தான்பி ழைக்கப் பிறர்கெட வெண்ணலாற்
    சன்ம கன்மம் வளர்ந்தன மற்றையோர்
தான்பி ழைக்க வுடற்கொடென் றேதிறன்
    றுண்ம றக்கி லழிவையென் னெஞ்சமே

யூன்ற மைக்கப் பிறர்பொருட் கொள்ளைகொள்
ளுவமை வாசகத் தாற்பிர மிக்கச்செய்
வான்வ ரும்வஞ்ச வேடக்கு ருக்கடன்
வாய டக்கியுன் மாயையொ ழித்திடே. (கூ)

கற்ற றிந்தவ ரேனுங்க லைபல
கற்கி லாதவ ரேனுங்க லங்கலார்
நற்ப தங்க ளுனக்கணி கூடெனு
ஞான வாரிதி தாடொழென் னெஞ்சமே
பற்ற றுந்தவர் போலும்ப சப்பியே
பஞ்சு போலலை யும்மன வஞ்சகர்
சுற்று நிற்க விடந்தர லும்விடு
சத்தி யந்துயர் முற்றும கலுமே. (க0)

மெய்க்குருவியத்தல் முற்றிற்று.
ஆக செய்யுட்கள் ருசு.

---

## மனனதிடம்.

### ஆத்மாநாத்மாவைக்கூறல்.

தானெனலறி வென்றுசொ லுண்மை கொளார்
தனையுடலள வாககொடு நிற்பதலா
லீனனமில திப்பியி லென்பது போ
விலையுலகறி வினிலெனி லோர்ந்தடையார்
கானனமிட ளுக்கொடு சடைமுடியுங்
காஷாயக மண்டல தண்டுறிலென்
ஞனமது கண்டில கேற்றிடினு
மவர்தருசிறு மொழிகளை யஞ்சிலனே. (க)

### ஆண்ம விலக்கண மறிவித்தல்.

தனையறிவது தனையய லறிவதனைத்
தானெனனல மெனமறை முறையிடலா
லெனையறிவது யானல மனமெனிலோ
விதுநிலையல வெனுமுனை பேசிடுவோர்
மனைகனதன தானிய மெனதெனலை
மதியறவொரி மலைமுழை வாழ்வுறிலென்
முனைவினையுனி புனைகழல் வனைதலலான்
மொழிதருசிறு மொழிகளை யஞ்சிலனே. (உ)

### அவத்தாத்திரிய சாக்கியான்மாவெனல்.

அந்தந்தவ வத்தையி லதுவதுவா
யானிற்கினு மவ்வவ வத்தைகடா
மெந்தெந்தவி தத்தும றுத்திடினு
மிலையாகிடு மொன்றினி லொன்றலைதாம்

வந்தெந்தபொ ருட்கணி கழ்ந்தழியு
மதுநானறி வின்றெனி லாத்தியெதோ
தந்தம்மதி போனவை ஞானமெனுத்
தருவார்மொழி கிஞ்சிலு மஞ்சிலனே. (ரு)

## உலகுபொய்யெனல்.

நனவினிலுல குடலினை தூலமுமாய்
நழுவியகன வினிலவை சாயையுமாய்
வனங்கர்துயி லினிலரு பாழ்வடிவாய்
மாறிடிலுல குடனிஜ வடிவெதுவோ
தினவனுபவ மாதலி ஞேர்மினெனிற்
செவிகொளவறி யார்பல கலையுணர்விற்
கனமலைபுனை வாரெனி லென்னவர்தங்
கதியறுசிறு மொழிகளை யஞ்சிலனே. (சு)

## ஆன்மாவையன்றியகிலமிலையெனத்துணிதல்.

அறிவினையறி வதுவறி வலதுபிற
வாகலசட மவையொரு முதலுமல
பொறிபுலன்மன முடலுயி ருலகிறையும்
போயொழிதலும் வருதலு முண்டறிவின்
மறுவறுதுயி லினினன வினிலறிதும்
மறுகலையறி வலதிலை பரவணுவும்
நெறியிதுநெறி யதுவெனு முறைதகையார்
நேராரிவர் தஞ்சொலை யஞ்சிலனே. (எ)

## பந்தமுத்தியகறல்.

மண்ணீரனல் வளிவான் றிரிபவையே
மாந்தர்கண்முத லேழ்வகைத் தோற்றநசிப்
புண்ணுடிலி றப்புப் பிறப்புமில்
லுடலிற்கு முதல்கெட லின்மையினுற்
கண்ணுமறி வோமறை யாதிதனுற்
காணிடிலிலை பந்தமு முத்தியெனிற்
புண்ணுகுவர் நீதிக டைப்பிடியார்
பூரியரிவர் தஞ்சொலை யஞ்சிலனே. (அ)

## உலோகாபவாதங்கழலல்.

மனைமக்கடு றந்தில மென்பர்சிலர்
மனமுண்டது போகில தென்பர்சிலர்
வினைமாண்டில தென்செய லென்பர்சிலர்
விதியாதுநி கழ்த்துமோ வென்பர்சில
ரெனையாண்டவ ரன்செய லென்பர்சில
ரிடைவாரறி வாகிட வினையகிலார்
கனைஞானிகள் போற்றமை பேசிடுவோர்
களையேற்றுவர் தஞ்சொலை யஞ்சிலனே. (௯)

### இதுவுமது.

குணபேதமி றந்தில தென்பர்சிலர்
கூர்மந்தனை யொத்திரு வென்பர்சிலர்
பிணமாம்வனை பேசுவர் ஞானிகளோ
பேசாரறி வுற்றவ ரென்பர்சிலர்
நினைவுடல்விட லாகுமோ வென்பர்சிலர்
நேராரறி வாகிட வினையகிலா
ரணல்வனையுறு துயர்கெட நினையகிலா
ரார்கொலோவிவர் தஞ்சொலை யஞ்சுவரே. (அ)

### இதுவுமது.

சும்மாவிரு சொல்லற வென்பர்சிலர்
சுகமாயொரு கணமு மிருந்துளையார்
நம்மாற்பலர் ஞானிக ளாகினர்கண்
ணுமௌனறையுங் கேட்பதி லென்பர்செயார்
பெம்மானுனை பேசின னென்பர்சிலர்
பிரிவற்றறி வாகிட வினையகிலார்
தம்மாலல தெம்மா லறநினையார்
தகுவர்களிவர் தஞ்சொலை யஞ்சிலனே. (கூ)

### இதுவுது.

விதியுண்டெனில் வந்திடு மென்பர்சிலர்
வினையார்தர வந்ததெ னக்குறியார்
பதிதந்திடி லாகிடு மென்பர்சிலர்
பசுவால்வர லரிதரி தென்பர்சிலர்
விதியாதிக ளேயென விடைபகரார்
விட்டுடலறி வாகிட வினையகிலார்
மதியாலரி யரனிலை யாய்ந்தறியார்
வாய்வாதிக டஞ்சொலை யஞ்சிலனே. (கo)

மனனதிடம் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் கூகூ.

---

## திரிபகறல்.

பொன்னை மாதரைப் பூமியை நிந்தித்த
லென்ன காரண மேழைது றந்திவை
யென்ன கண்டன னேதுமி லைமத்தந்
தன்னை விட்டக லத்தான் பிழைப்பனே. (க)

ஏது மீசன் செயலென் றுரைத்துப்பின்
பேத முண்டெனப் பேசும றையிதி
லேது நிச்சய மென்றிவை யாய்கிலா
ரோதி யோதுவ ருண்மை தெளிவரே. (உ)

விதிய லாது விளைகில தொன்றெனும்
மதிவ ருந்த வருமெவை யும்மெனு
மெதுகொ லோநிஜ மின்னதி தற்கெனு
மதிய கில்லா மருண்டு கிடப்பரே. (௩)

வேத மோதி விபூதித ரித்துவீண்
வாத மேபுரி வார்மிகு வஞ்சகக்
காத கர்தமைக் கண்டவர் பல்லுரு
பேத மோதிப் பிழைக்கில ருண்மையே. (௪)

சிவம யமெனச் செப்பிடு நான்முகத்
தெவையெ னுவறி யாரீ ததிசயம்
புவனம் யாவும் புருட னுருவமே
லவனே யானெனில் யாதுபி ழையதே. (௫)

சருவம் விஷ்ணு மயஞ்ஜகத் தென்னவே
கருவ மிக்குக் கழன்றனர் போன்முனோர்
பருவ தங்கட் பறக்கடிப் போமென்றீ
வருவ தொக்கு மறுப்பவர் வாதமே. (௬)

அவனை யன்றி யணுவசை யாதெனு
மிவனெ வனிவ னெப்படி கண்டன
னவன ருட்கொண் டறியினுங் காண்பவ
னெவரி னும்பெரி யானென லேற்குமே. (௭)

எங்கு மீச னிருப்பிட மென்றபின்
னங்கிங் கோடி யலைந்துதி ரிவதேன்
சங்கை தீரத் தமிழ்றெளி வுற்றிடி
னெங்கு முள்ளவ னைக்கண் டிருப்பரே. (௮)

முன்னி லங்கு முயிருல கம்முத
லின்ன காலத் திவர்படைத் தாரெனச்
சொன்ன நூலிலை சொல்லு மநாதியென்
றென்ன வேதுல கில்லை யெனற்கரோ. (௯)

தன்னை யின்னவ னென்று தெளிந்தலோ
பின்னர் பேறு பெறற்கு முயலலா
மென்ன மாய மெவர்சொலு நம்புதல்
பொன்னெ றிந்து புழுதியை வாரலே. (௧௦)

மான மின்றி மலஞ்சிறு நீர்புழு
வூன ரம்பு முதிரமு ரோமஞ்சே
ரீன மாமுடல் யானென் றிசைப்பனோ
ஞானி யென்ன னகைப்புக் கிடமிதே. (௧௧)

ஞான மேவடி வாகினர் ஞானியோ
தான லாவுடற் றூனெனக் கொண்டபி
மானம் வைத்து வயிறுபி ழைக்கப்பொய்ஞ்
ஞான மோதுவ ரோதெளி நங்கையே. (௧௨)

எந்த தேக மெவர்க்குச் சதம்வந்து
வந்து போனவை மட்டில வேவிறை
தந்தெ ஞமுட றூனென லற்றிடப்
பிந்தி வந்து பிறவியென் செய்யுமே. (௧௩)

வறுமை நோய்மர ணங்கள் வருந்துவோ
ரொருவ ரில்லை யொழிந்தவ ருமிலை
யருமை யானவை யுமது போலவே
வருவ வந்திடும் யாவாத டுப்பரே, (௧௪)

இணையி லாததோ ரின்பம டைந்தவர்
பிணையுட் பட்டுப் பிறர்க்கிதம் பேசிலா
ரணைக டந்த வருளுடை யார்க்கெலா
மிணைய லாதிழி வோடுயர் வில்லையே. (௧௫)

ஆதி யெவ்வுடற் குமைந்து பூதமென்
றோதி யார்க்கு முரைத்துப் பலபல
ஜாதி யுண்டெனச் சாற்றி லறிவுடை
நீதி யாளர் நெறியெனக் கொள்பவே. (௧௬)

ஆசை விட்டி டரன்பதஞ் சேரெனுக்
காசை வேண்டிக் கதைபடிப் பார்கடாம்
வேசை போன்ற விரகுடை யாரலா
லீசன் மெய்யன் பினிற்சிக் கிலார்களே. (௧௭)

தேக நானெனத் தேடுமி ருவினை
மோக மென்று மொழிந்த தறிந்தும்பி
னேக ஞான மியானென்பர் மேற்பழி
யூக மின்றி யுரைப்பதுங் கல்வியே. (௧௮)

நதிச முத்திர நண்ணுவ போலுயிர்
பதியி னிற்கலப் பென்று பழமறை
விதியு ரைக்கும பேதங்கொ ளார்க்குநற்
கதிவ ரல்கன வாகுங் கனங்குழாய். (௧௯)

இன்றிங் கீச னிருப்பை யுணர்ந்திலார்
பொன்ற லுற்றபின் போயறி வேமென
நின்ற ரற்றுவர் நின்மல னோரிடத்
தன்றி யெங்கு மவனிலை போலுமே. (௨௦)

மாண்ட பின்னர் வைகுண்டத் தறிவரா
மாண்டி ருக்கு மரியிவ ணில்லையோ
காண்ட லுக்களி தேகங் கழன்றபின்
காண்ப மென்னல் கதையென்ன லாகுமே. (உக)

ஈச னெங்குள னெங்குங் கயிலையே
வாசு தேவன் வைகுண்ட முமங்கனே
யாசை விட்டவர்க் கன்றிவி ளங்குமோ
காசு றும்விழிக் காதித்தன போலுமே. (உஉ)

ஐந்து பூத மருண னிளம்பிறை
நந்த லில்பர மாநந்த னல்லுயி
ரிந்த வெண்வகை யீசனு ருவமே
லெந்த வாரிங் கிசைப்பது பேதமே. (உ௩)

எல்லை யற்றவ னீச னெனச்சொலிக்
கல்வி லுமிருப் பானெனக் காட்டுவா
ரில்லை யோதன் னிடத்தவ னென்றறிந்
தொல்லை சேர்கில ருய்ந்நெறி யொண்டொடீ. (உ௪)

சத்தி யற்ற சடங்கட வுளெனப்
பத்தி பண்ணப் பரகதி வாய்க்குமேற்
சித்சொ ரூபன் சிவனெனப் போற்றுவோர்
முத்த ராவதின் மோசமென் மொய்குழால். (உ௫)

பேத வாதம் பிதற்றுவர் கற்சிவ
ஞாத லுக்கிங் கனாவதெவ் வாதமோ
வேது மீசனை யன்றியி லாமையா
லோதி ஞர்பெரி யோரென் றுணர்ந்திடே. (உ௬)

கோப மாதி குணங்கள் விடுத்திலார்
சாபம் வைப்பர் தமைப்புக ழாரெனின்
மாப வித்திர வேடந் தரிப்பினுந்
தாப தரெனச் சாற்றற் பிழையதே. (உ௭)

ஆசை யற்றவர் யாவ ரவர்களே
யீசன் மெய்யன் பினிலீ டுபட்டவா
பூசு ரரிவர் பொன்னடி போற்றுவோர்
நாச கால நமன்றுயர் நீப்பரே. (உ௮)

கற்றி லாதவ ராயினுங் காவியைப்
பெற்றி லாதவ ராயினும் பேயர்போற்
பற்றி லாது பதைப்பற் றிருப்பனை
யுற்றுச் சேவிக்க வொன்றுநன் ஞானமே. (உ௯)

அக்க மாலை யணியினும் பூதியை
யெக்க ணுந்தெரி யாதுட லேற்றினு
நக்க ணுமை நவிலினு மென்னசை
மிக்கு ளாளாநீ வேடரென் றுன்னிடே. (௩௰)

குறைவி லாதபே ரின்பங் குளித்வா
நிறை மதிக்கொடு நிற்ப தலாற்பிற
ரிறையு மோக வியற்றிலர் நன்முது
மறை யுணர்ந்தவர் மான்மருட் கண்ணினாய். (௩௧)

யொன்ற லாதுல கந்தெரி யாமலே
நின்ற பேர்க்கடை யாள நினைப்புறி
னன்று தீதெனு நாட்டமி றந்திகழ்
வொன்றப் பேசி னுளமறு கார்களே. (௩௨)

பெண்ணை யாருயி னாயஞ்சொற் பிள்ளையைக்
கண்ணை யீந்தவர் காதை தெரித்தலா
லெண்ணு வார்தமை யீசன டியரா
யுண்ணுஞ சோறுக குணைபொய் விடார்களோ. (௩௩)

அன்ப ரென்றிங் கடுத்தவா கைப்பொரு
ளண்ப தேபலர்க் குய்ந்நெறி யல்லது
துன்ப நீங்கச் சுருதி மயக்கொழிந்
தின்ப மெய்தின ரெங்கு மரியரே. (௩௪)

ஞான ஹீனர் நவிலிற் பசுவிற்ச
மான மென்று வழங்கும் பழமொழி
தானு ணர்ந்துந் தனைத்தெளி யார்மதி
யீன ரென்னி லெதுபிழை யேந்திழாய். (௩௫)

எத்தி றத்து மிடாதுலை யாமையாற்
சுத்த ஞானச சொரூப முற்றார்நலோர்
பித்தர் காண்பொருட் பேணுவ ரிவ்வுல
கத்தைப் போலெவ் வுலகததுங் கன்மமே. (௩௬)

கடக கங்கண மார மணிமுடி
படம ணிந்த படைக்கல வேந்தெழில்
விடமெ னுத்துரும் பென்ன விடுப்பவர்க்
கிடர லாதெது வீனுஞ் சுவர்க்கமே. (௩௭)

ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவர்
பீடு சால்பெரி யோரெனிற் பீதக
நாடு யாதவர் நாட்டத்திற் கோர்கலார்
வீடு மேவிட மென்னல் வியப்பிதே. (௩௮)

மறதி யாலுறு மாத்துயர் நீக்கலே
சுருதி யாகமச் சொற்றுணி வாய்ந்திடிற்
பிறவி துன்பமெங் காயினும் பேர்கலார்
துறவரோ வீடு துன்னின ராவரோ. (௩௯)

பூத நாதன் புராந்தகன் யாவன்கொ
லாதி யந்தமி லாவறி வன்றெனில்
யாது ருக்கொ டிருப்பனெ வற்றுளுஞ்
சோதி யார்தற் சொரூப முணர்வரே. (௪0)

அங்கி வாயு வருண னருணனுந்
திங்க ணீர்நிலந் தேவி பகனே
லெங்கு மாமுணர் வென்னிதை யோர்கிலார்
புங்க ஞானம் புகலில் வெறுப்பரே. (௪௧)

ஜாதி பேதஞ் சமயஞ் சடங்குடன்
மிதிருத் திவெவ் வேறுபன் மூர்த்தியென்
றோதி யார்க்கு முரைத்துப் புராணமே
நீதி யென்பர் நிஜமறி யார்களே. (௪௨)

எண்ண மன்றி யிறையுயிர் வேறெனு
விண்ணின் மண்ணில் விளங்க வெவர்கடங்
கண்ணில் கண்டவ னாக்கண்ட வர்முனோர்
பண்ணுரைத்துப் பகட்டித் திரிவரே. (௪௩)

தேக முண்டித் திரிபிது நாமலே
மூக மாம்புல னன்றி விளங்குமோ
மோக மாங்கன வில்வரு மோவியத்
தேக மானத மின்றித் திகழுமே. (௪௪)

இறந்தி டாமு னிறத்தன் மனம்விழி
யுறங்கி டாமு னுறங்கன் மறவியான்
மறந்தி டாமுன் மறத்த லுலகுயிர்
சிறந்த மேலவர் செய்கை நன்மோக்கமே. (௪௫)

கால நீக்குமுன் கைவிட லாக்கையை
ஏல வார்குழ லேயென் னிடர் நசை
யால காலம லாதிலை யாய்கிலை
சால வோதித் தருக்கிற் பயனெதே. (௪௬)

தந்தை தாய்க்குறு ஜாதி மதம்விட
னிந்தை யென்பரின் னீணிலம் விண்டுவால்
வந்த தென்னின் வழக்கென் விதிமுத
லெந்த ஜீவனு மீசன் குலமதே. (௪௭)

இன்று நாளையு மெண்ணி லுயிர்பொரு
ளொன்றி ளென்ப துதித்த லுணர்ந்துல
கன்றே யீச னனைத்தும் படைத்தன
னென்றே மாப்ப ரிவர்தெளி வென்னையோ. (௪௮)

திரிபகறல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௧௧௪.

---

## தெளிந்தது தெளித்தல்.

அந்தமு மாதிந டுவுமி லாப்பர மாநந்த மானேனடீ
யெந்த பொருட்கு முதற்பொரு ளொன்றறி வேற்ற விடத்திலடீ
சிந்தனை யற்றுச் சிவமாய் விளங்கிடச் சின்முதனை யீதேயடீ
பந்தத்துட் பட்டுக் கெடுவார் வெறுத்துப் பகைத்துக் கெடுகவடீ. (௧)

வந்துபி றந்தும் பிறவா விறவா தவான்பொரு ளானேனடீ
யிந்தவு லகென்னி னேவன்றிக் கண்டில னென்றவி டத்திலடீ
சிந்தையி றந்தெதி ரற்றுவி ளங்குஞ்சி தம்பர மீதேயடீ
தொந்தத்துட் பட்டுதெ துலைவார் வெறுத்துத் துவக்குண் டிருக்கவடீ. (௨)

ஏதமில் லாப்பர போதவ டிவாகி யேகாந்த மானேனடீ
பேதவ பேதங்கொண் ணுதனு ரென்றெனைப் பெற்றவி டத்திலடீ
சாதல்பி றத்தலி லையுயிர்க் கென்றே சகலருஞ் சொல்வாரடீ
நோதலி றத்தலே னென்னில் வெறுப்பவர் நெந்தே படுகவடீ. (௩)

வேறு.

கண்ணோடு காதுடன் மூக்குநாக் கற்றெலாங் காண்பவ னானேனடீ
விண்ணோட கிலச ராசர மெங்கும் விளங்கக் கனுவிலடீ
பெண்ணோக னவுங்க னவேவே றன்று பிரிந்துடல் காணுதடீ
தண்ணுர றிவை நினைவே யிரண்டுந் தடுப்போர் தொடுப்போரடீ. (௪)

காணுக்க டவுளைக் கண்டகி லந்தேடிக் காணுதொ ழிந்தேனடீ
வீணுமு லகுண்மை யென்றுகொள் வாசனை விட்டவி டத்திலடீ
மணுவு லகமுக் காலநி லையென்று மதிகொள்வ தார்தேரடீ
பேணுர்த மைத்தா மறியா ரவர்சொற் பிதற்ற லழகல்லடீ. (௫)

ஏதும்பெ ருமலெல் லாம்பெற்ற வன்போல வின்புற் றிருந்தேனடீ
யாதுஞ்ச டமிதி லேதோ சுகமென் றகன்ற விடத்திலடீ
தீதொடு நன்மைபொ ருளிடத் தோதத்துஞ் சிந்தையி லோதேரடீ
ஏதுகொல் யார்க்கும் பிரியந்த னையன்றி யேற்றக் குறைவேயடீ. (௬)

வேறு.

வாய்பேசி வாதாட மௌனம்விட் டகலாத வகைகண்டு கொண்டேனடீ
தாய்மலடி மகனரசை யாள்கிலா னறிவிற் ஜகம்வரா மையினுலடீ
பேயர்சிலர் வாய்மூடி யேதிரிவர் சிலரொன்றும் பெசாதே யென்பாரடீ
பாய்மனதை மூடவகை வாய்கொடல துபதேசம் பன்னுவா ரிலைதேரடீ. (௭)

**வேறு.**

அருவாகி யுருவாகி யருவுருவு மாகியிவை யன்றாகி நின்றேனடீ
வருதுயிலி னனவுகன வுகளிலரு துரியத்தில் வம்பால வென்பாரடீ
திருவுடைய வுடல்வளர விருமைபெற வலைகுரவர் தேரார்க ளென்செயலடீ
யருமைமிகு வருமைகுரு துரியவடி வானோர்கள் யாதுங்கை விடுவாரடீ. (அ)

அரியாகி வரனாகி யயனாகி நின்றதே ததுவாகி நின்றேனடீ
யரியரனு மயனாகி நின்றதறி வேயுண்மை யயலென லடாதுவிடடீ
தெரியாத பேர்தமைத் தேடாத பேர்வேறு செப்புவார் தப்பாமடீ
நரியினாயை நானென்று நீயெனுக் கொண்மடமை நாஞ்சொல்வ தினியென்னடீ.

சவிகற்ப நிருவிகற் பச்சமா திகளென்றன் றகைமைக்குப் போராச்சடீ
யவிரோத மாகவறி வேவிளங் கக்கண்ட டைந்தவி டத்திலடீ !;
புவியுளோர் பலகிட்டை மந்த்ரஜப மாதிமேற் பூச்சுகாட் டிடுவாரடீ
சிவமாக வைக்கவுல காமனதை யறிவாற் செகுப்போர் பிழைத்தாரடீ. ()

தெளிந்தது தெளித்தல் முற்றிற்று.
ஆக செய்யுட்கள் கஉ௪.

---

# அபயம்.

---

நீடமா ருலகத் தவர்சென் னெறிவெவ்
விடமே யெரியே யெனவிட் டகலக்
கடையே னையருட் கண்ணு வருளம்
மடிகட் கடியே னடைவே னபயம். (க)

பொன்னாற் புவியாற் புனைமங் கைநலந்
தன்னாற் சுகமுண் டெனத்தட் டழிவேற்
கென்று லெனைகண் டெனிலின் புறவீ
யன்று வடிகட் கடியே னபயம். (உ)

தானு ருலகந் தந்தா னெவனிவ்
வூனு ருடல்வந் துறலே னெனலான்
ஞானு நந்த சுகந்தா னக்கொளி
ரானு வடிகட் கடியே னபயம். (௩)

பொய்யா முலகும் பொருளோ டுடலும்
வெய்யோன் மகனும் விதியுங் கதியு
மெய்யா முனிறந் திலைபோக் கன்மனத்
தையங் கெடுவென் றவடிக் கபயம். (௪)

மண்ணால் வருவ மண்ணு மதுபோ
லெண்ணீ யெதுவா குவையிவ் வுடல்விட்
டுன்னு வகையென் னெனவே யுணர்வீ
யண்ணு வடிகட் கடியே னபயம். (ரு)

இதுநா மெனவிங் கிசையச் சொலிபின்
னெதுசெய் யெனினு மிசையத் தருமிங்
கதுகாண் கிலர்சொல் லதுதந் திடுபே
றெதுபொய் யெனுமெம் மிறைதாட் கபயம். (௬)

உயிரே துலகே துடலே துலைவே
தயிர்வாம் விதியே தகமே தயலாஞ்
செயிர்வே துனைநீ தேரிற் றெளியா
தயரோ லெனுமெம் மடிகட் கபயம். (௭)

அழியா வுனைநீ யறியா மையினாற்
பழியாம் பிறவி பதமுத் திகளார்
வழியா லுலைவா தனைவந் தவெனச்
செழிபே றருள்சே வடிகட் கபயம். (௮)

பெரியார் சிறியார் பெற்றார் பிறரென்
றறிவா தனைவிட் டகலா ரகலார்
பெரிதாம் பிறவிக் கடனீ யருவா
யறிவா யிருவென் றவடிக் கபயம். (௯)

சிவமாம் பொருளன் றியிலோர் பொருளு
மிவனுண் டெனிலுண் டிகழும் பாழு
மவனீ யெனசொல் லருமா மறைவாக்
கவமோ வெனுமெம் மடிகட் கபயம். (௧௦)

உடனா னெனவுன் னுதலே யொழியா
மடமை தருமா யையின்மா சறவே
திடஞா னசொரூ பமேயா னெனலே
கடனென் றவடிக் கபய மபயம். (௧௧)

எதுவேண் டினும்வேண் டிலையா யினுமென்
னிதுவென் னனவவ் வளவே யிவையென்
முதுஞா னசொரூ பமுமன் றயலன்
றெதுபற் றெனுமெம் மிறைகட் கபயம். (௧௨)

அபயம் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௧௫௬.

---

## உபதேச வினாவிடை.

ஞானமேதென் னையனேயுன் னற்சொரூப மைந்தனே
யீனமேது தோற்றமுண்மை யென்றுகொள்ளுன் பாவனை
மானமேது சித்தெனக்கோர் மடமையில்லை யெனலறி
மோனமேது ஞானமேலோர் முடிவுமில்லை யென்பதே. (௧)

வித்தையேது யாவுங்கற்கு மெய்யறிவைக் காணுதன்
மித்தையோ பிராந்திஜந்ய வின்பதுன்ப விபரிதஞ்
சித்துமே வவத்தைநம்பு ஜீவசாட்சித் துரியனுஞ்
சத்தியாவும் வந்தடங்கத் தானிடங் கொடுப்பதே. (௨)

இன்பமேது தன்னைத்தா னெலாவிடத்துங் காணுதற்
றுன்பமோ தனைமறந்து சொற்பல பிதற்றுத
லன்பதோ தனைத்தெளிந் தனைத்தையும் பொய்யாக்குதல்
வன்பவமோ நனைவையன்றி வருவதல்ல வென்பதே. (௩)

தெய்வமேது சர்வதேக தெகியாகு மறிவுகாண்
பொய்யதேது நாமரூப பூதபௌதி காதிகண்
மெய்யதே தநந்தவின்ப மேசொரூபந் தன்னுரு
வுய்வதோ தனைப்பிடித்திங் கொன்றும்வேண் டிலாமையே. (௪)

ஜாதிதன் னமிசமென்று சகலமுள் ளடக்குதல்
வாதியாவர் மனமலாது மற்றொருரில்லை காண்பொருட்
காதியாவ ரென்னினீ யநாதிநீ யலாதிலை
சோதியாவை யும்விளக்குஞ் சுத்தஞான சோதியே. (௫)

பத்தியேது ஞானதேவை பகலுமிரவும் பரவலுன்
முத்தியே துலகுந்தானு மோர்வடிவ மாகுதல்
சித்தியோ மனப்பகை ஜயித்தடங்க லாளுதல்
சுத்தவீர மெதிரறச் சுயம்புவாகி நிற்றலே. (௬)

அண்டமேது நனவனைத்து மாகிநின்ற கோலமாம்
பிண்டமேக தேகமாய்ப் பிரிந்துணர்ந்த போகமாங்
கண்டமே தவத்தையுண்மை கண்டொருங்கு படுதல
கண்டமோ தனைத்தெளிந்து கற்பனை கடந்ததே. (௭)

பொருளதே தழிவிலாத போதரூபங் காப்பதே
மருளதேது மந்த்ரயந்த்ர மகிமைபேசி மாழ்குத
லருளதே துலகெலாந்த னுருவென் றெண்ணுத
லிருளதேது ஞானம்விட் டெலாக்கலையுங் கற்பதே. (௮)

புருடர்யாவர் பகைவரேனும் பொய்மைதீர வெண்ணுவோர்
திருடர்நம்பி நர்க்கிங்குண்டு தெய்வங்குருவு மென்பவர்
குருடர்தம்மைக் காண்கிலார் குருக்கள்வேடங் கொள்ளுவோர்
மருடறந்த பேர்நிராசை மன்னிவாழும் புண்யர்காண். (௯)

பொய்யர்யாவ ருடலினுசை பூட்டியாட்டிப் போக்குவார்
மெய்யர்யாவர் மலைவுதீர வேதமுடிவைக் காட்டுவா
ரையர்யாவ ரையநீங்க வாதியந்த மூட்டுவார்
வெய்யர்வேட மிட்டுவிபவ வெறிகொடெங்குந் திரிவரே. (௧௦)

மூடமேது தனைமறந்து மூச்சடைக்க முயலுதல்
கேடதேது கேடிலான்றன் கேடுநீக்க வாடுதல்
பாடனந்த விற்கெடும் பவத்தொடர்பு பற்றுதல்
வீடதோ வெறுப்புவப்பு விளைசலிப்பு மற்றதே. (கக)

பெரியர்யாவர் மகிமைசித்தி பெருமையாதி வேண்டிலா
ரரியர்யாவர் பரமசுகம லாச்சுகத்தைத் தீண்டிலார்
சிறியர்யாவர் நடுவிகந்து தெளிவினைக் கலக்குவா
ருரியர்யாவ ருண்மையாள ருலகிலெவ் வுயிர்கருமே. (கஉ)

உபதேச வினாவிடை முற்றிற்று.
ஆக செய்யுட்கள் கசஅ.

---

## நன்றி மறவாமை.

இப்பாரிற் பிறந்திறக்கு மிடுக்கணுக்கிங் காளாகி
யொப்பேது மறியாத வொருபொருளை யறியேனை
முப்பாழும் பாழாக்கி முதற்சூனி யங்கடந்தி
யப்பாலில் வாழவைத்த வடிமறக்க லாவதுவே. (க)

விருப்புவெறுப் பாமுலக விடயநெருப் பாற்றிவிழுந்
தாக்குழைந்து கருகியதி ஞஇயந்த மறியேனை
பரப்பிரம மாக்கிமயிர்ப் பாலமெனு மறிவேற்றித்
துரக்கவடி வாக்கடிக டுதிமறக்கத துரிசறுமே (உ)

பலநாறு முடல்வியக்கு மட்டிகட்கு வகுத்தபல
குலகோத்ர வளராழ்ந்த குருடரின்பின் விழுவேனைப்
புலைபாண வப்பகையைப் போக்கியறி வாக்கிமுத்தி
நிலமேற்றி வாழ்வருளு நிமலனடி நினைவறுமே. (௩)

சித்தசித்து வடிவாகித் திகழ்மனதை ஐயிக்கவழி
பத்திசித்தி யோகமெனப் பகட்டுவர்பின் பரிந்தேனை
பெத்தமுத்தி மாயைபிற பேசுவதென் னறிவலது
சத்திலையென் றளித்தவடி தனைமறக்கிற் சார்பெதுவே. (௪)

அரிபெரிய னலபெரிய னரனெனவே வாதாடிப்
பெரியாகருத் தறியாது பிதற்றுவர்பின் றிரிந்தேனை
யொருபொருளை யன்றியிலை யுலகமென வனுபவத்திற்
சரிவரவே காட்டடிக டனைமறக்கச் சழக்கறுமே. (௫)

அவரவர்க ணினையுநினை வவர்க்குறுதி யென்னுது
சிவனசெயலென் றரைந்துபிறர் சிறுமைசெப்பித் திரிந்தேனை
யவத்தையொரு மூன்றுமறுத் தாநந்த வடிவாக்கிப்
பவங்கெடுத்துத் தடைவிடுத்த பதமறக்கும் பான்மையதே. (௬)

பராபரனென் றுரைத்தமொழி பயனறியாக் குரவர்பலி
தராதலத்தி லவர்கண்மொழி தலையின்மிசைச் சுமப்பேனை
புராதனபே ரறிவூட்டிப் புகல்வாட்டி யிருளோட்டிக்
கராளமறுத் தாண்டவர்தங் கழன்மறக்கக் கரிப்பறுமே. (௭)

கொலைகளவு காமாதி கொடுநரகத் தீச்சூழ்ந்து
நிலைகலங்கி மனமபுழுங்கி நெறியொதுங்கி நின்றேனை
கலையுணர்வி னுஞ்சாந்திக் கடலாடச் சுகநீட
மலைவோட வைததவடி மாண்பதனை மறப்பதுவே. (௮)

அகண்டசச்சி தாநந்த மாகுமெனின் மகிழாம
விகபரங்க ளாஞ்சடங்கட் கேற்றமுறைத திரங்குவனைச்
சுகவடிவ னுக்கிமலஞ் சோருமரு ளுறைதேக்கி
யகமயக்க மழித்தவரின னடிமறக்க வறிவுறுமே. (௯)

வேதமுத லாதிகலை விரிக்குமெனை யறியாம
லோதிபிறர்க குறைஉநமறை யுண்மைதனை யறியேனை
யாதியந்த ர்மறையி லறிவதெதை யுனையலது
போதுமுறை யெனவொழித்த புனிதனடி போற்றரிதே. (௧௦)

நன்றிமறவாமை முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௧௫௮.

---

## சாதனமுறைமை.

---

பிரிவறு நின்னிலை யேதது பரகதி
பேசறு கேவல நிருவாணம்
புரிவற மனமறு மிடமது சயநின்
பொருவறு நன்னிலை பரிபூர்ணம்
சுரியறு நன்னிலை யீதிதி னின்றவா
சோர்கிலர் பவபா ராவாரம்
பரிவொடு வந்தரு ளுதமு னிக்குரு
பதமலர் பிரிகில னொருநாளும். (௧)

பொன்றினர் கனவிற போகலர் நனவிற்
போன்றரு துரியந் தனினேசம்
ஒன்றினர் நனவி லுடல்கெட லறிகில
ருருகிலர் மரணப யமிலேசம்
அன்றியு மதுவது வாகவி ளங்குவ
தறிவல துண்டெனல் படுமோசம்
என்றிவை வந்தரு ளுதமு னிக்குரு
வினைமலர் பதமென் னுயிர்வாசம். (௨)

எங்கெங் கேதுத டிக்கினும் விடாம
லேதோ தடித்த தெனுநோக்கால்
அங்கங் கதுவறி வாகக் கரைத்தி
டயலறு மென்றன னருணோக்கால்
இங்கென் வினைவலி கெடமன மாயை
யெரிந்து கரிந்திட வெழில்வாக்கால்
அங்கிங் கெனலறு நாதமு னிக்குரு
வடிசிந் தித்திட மிகுதேக்கால். (௩)

நீயுல குடலுயி ருண்டென நனவி
னினைந்திடு நினைவா லுளவாகும்
நீயெஃ துளதெனி லிவையுள வென்று
நினைந்திட வாரா தவைபோகும்
நீயறி வாகிநி லைத்துவி ளங்கிட
நிர்வா சனையாய்ப் பவமேகும்
நீயல திலைநா னென்றவ னடிதர
நின்றில துலகுண் டெனுமோகம். (௪)

அறிவறி யாமைக ளாகியு மாகா
வறிவே தானா குதன்ஞானம்
குறியிது போன்மெய்க் குறியில தென்றக்
குறியி லடங்குவ ததுமோனம்
வெறிகொடு பலபல சாதனை மேற்கொடு
வீண்பட விடலே னிவையினம்
செறிதர வெனையா னாதமு னிகுரு
செப்புரை யேமா னஞானம். (௫)

நாயல வுலக நாமல பிரம
நாமுயி ரென்பாய் நன்றாகும்
நமுட லலவே யுயிரறி வலவோ
நமைவிட் டிலகுவ தென்றாகும்
நாமுட லாகா விலகின் றிடவிவை
நம்முரு வாயன் றென்றாகும்
நாயகன் போநீ காணென குருவரு
ணாட்டின னயலணு வின்றாகும். (௬)

கண்ணா டியில்வரு கண்ணிணை காண்பார்
கண்ணிடை காண்பார் வெளிகாண்பார்
விண்ணா டிச்சா யைமதி யிரவி
விளக்கொடு நாசியி னுனிகாண்பார்
புண்ணா குவர்வளி நடைதடை பூண்பார்
பொய்யுரு வலதுத மைக்காணார்
தண்ணார் மொழிதரு நாதமு னிக்குரு
தாளிணை பூண்பர் தமைக்காண்பார். (௭)

கற்பனை சேராக் கதிகே ளெனையான்
காணேன் பிரியே னறிவொன்றே
முற்படு மேலெது காண்பேன் பிரிவேன்
முனிவரு ளோதனு வயலின்றே
தற்பர மாகிவி ளங்கி நிலைத்த
சதோதய மறிவோன் றெனுமன்றே
யுற்பவ கானுக் கெரியென சற்குரு
வுதவின னுபதே சமு நன்றே. (௮)

பாவனை யுலகம் பாவனை சடலம்
பாவனை கண்டம கண்டபதம்
பாவனை யேசுக துக்கம வத்தைகள்
பாவனை பந்தமு முத்திநிதம்
பாவனை யேமுக் காலம் புண்ணிய
பாவம் பாஷைகள் சாந்திகதம்
பாவா பாவம் நீயல வேறல
பாரென் றுன்குரு பதஞ்சதம். (௯)

அறிவே பிரமமு மறிவே நீநா
னன்றெனின் மூட மனித்தியமே
யறிவிலை யேலோ ரணுவுந் தோன்று
தகிலங் காலஞ் சத்தியமே
அறிவால் வந்தன வேதங் கீதமு
மறுபா னெண்கலை தத்தியமே
யறிவென னனவு பிறப்பிட மென்று
னன்றென லென்றும சத்தியமே. (௧௦)

சாதனமுறைமை முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௧௯௮.

---

# அச்சம்.

தானெவ னெனநன் கோரார் தனிமறை யுரையுங் கொள்ளார்
ஞானசாத் திரங்க ளாயார் நாலொரு கவிகற் றோயார்
மோனமே முடிவென் றோதி முன்பினு மலைவுற்றா
ராணக வாயர் நிந்தைக் கவனோநா மஞ்சு மாறே. (௧)

மாயையே திருக்கி னன்றோ மற்றதைத் துடைப்ப தென்பார்
பேய்மன நிலையா தென்றே பின்னொரு கணத்திற் சொல்வார்
நீயெவ னெனவே பொங்கி நிறுத்துவாய் ஞான மென்பா
ராயத்திற் கலைபொய்ஞ் ஞானிக் கம்மநா மஞ்சு மாறே. (௨)

அன்பர்தம் வேடம் பூண்பா ரரகர சம்போ வென்பா
ரின்பமீ வதற்கு மாறா யெவற்குமே துன்ப மீவார்
வன்மொழி புகன்று பக்கு வத்தினை யாய்ந்தோ மென்பார்
ஜன்மத்தை வீண தாக்குஞ் சண்டிகட் கஞ்சு மாறே. (ங)

தனுகர ணங்க ளீசன் றருதலேன் றன்னைத் தெர்ந்திங்
கனுப்பிர வேச வீச னடியிற்சென் றடங்க வென்னின்
மனுகுல தரும மாதி வரன்முறை முடிமுன் னென்பா
ரினியெனு முரைப்ப மன்னு ரீறில்வாய்க் கஞ்சு மாறே. (ச)

ஜீவனு மென்று ணுரைத் தேயத்தோ ரதையே வேத
நீயென வுரைக்கி லெச்சீர் நோர்ந்ததோ மறைநா மத்திற்
கேயமி லரனீ யென்றே யிசைத்திடல் சிறப்பா மென்னின்
மாயவா திகளென் றேது மடமையிற் கஞ்சு மாறே. (ரு)

பத்திமெய்ஞ் ஞானநீதி பயனென வறிவ ரேற்பின்
சத்தியந் தவறி ஞாயந் தனைக்கடந் தனுவும் பேசார்
சித்தியு மகிமை பேசித் திரவியந் தேடா ரென்னின்
முத்தர்நீ ரெனப் பழிக்கு மூடருக் கஞ்சு மாறே. (சு)

அரியர னுதிநாமத் தரும்பொரு ளிலக்கி யார்த்தஞ்
சரிவர வுரையார் தேடார் சாற்றுவா ருரையுங் கொள்ளார்
பெரியவர் வேடம் பூண்டு பித்தரோ தீர்தத மூர்த்தித்
தரிசன மளித்தோ ரென்று தருக்குவோர்க் கஞ்சு மாறே. (எ)

பொய்யுல கென்னு நூலும் புனிதமெய்ஞ் ஞான மொன்றே
மெய்யென வுரையா நூலும் வேறுசா தனைக ளெல்லாஞ்
செய்திடப் பதவி தந்து சிதையுமென் றுரையா நூலும்
வையமீ திலையென் றூலுண் மறுகுவோர்க் கஞ்சு மாறே. (அ)

சரியைநற் கிரியை யோகந் தத்துவ ஞான நான்கிற்
பெரியதும் பிறப்பை நீக்கிப் பேரின்ப முத்தி யீனற்
கரியது மெதுகொல் பத்தி யாகிற்பின் னிரண்டு சொற்றூர்
தெரிகிலா தவரோ வென்னி றீளக்கிலார்க் கஞ்சு மாறே. (கூ)

எடுத்தமா ஜன்மம் பாழி லேகுதற் கஞ்சா ரஞ்சி
யடுத்தவர்க் கருளா ரச்ச மாடுவர் பொருட்கைக் கொண்டே
யுடுப்பது முண்ப தும்பின் னுறங்கலுந் தவமாய்த் தர்க்கந்
தொடுப்பதி னுட்கழிக்குந் துட்டருக் கஞ்சு ம றே. (கு0)

அச்சம் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் களஅ.

---

## ஐயமகற்றல்.

நினைவொன்று மில்லாம னிற்கினக மென்பார்
நிற்கவகை சொலுமெனவென் சற்குருவைக் கேட்டே
னெனையன்றி யானறியே னீயறிவாய் போலு
மெதுநினைவோ வெங்குளதோ விசையெனவுங் கேட்டான்
நனைமலரே போல்வாடி நலியுமெனைப் பார்த்து
நகைத்துனைநீ பாரெனவ கத்தவிச மர்ந்தே
யனைத்தாகி யன்றுரு மறிவிருக்கக் கண்ட
தல்லாமன் மற்றவெறுஞ் சொல்லாச் சென்னேடி. (௧)

### வேறு.

ஒன்றைமறந் தொன்றைநினைந் துறுகணத்திற் கிடையே
யுள்ளநிலை துரியமென்ப ருறைவதெய்வா றென்றே
னென்றுமொரு படித்தாகி யிலங்கறிவே யல்லால்
யானறியேன் பிறவிருக்க நீயறிவாய் போலு
நன்றெதனை மறப்பதெதை நினைப்பதென நககான்
நானுரைக்கு மெவையுமறி வாயிருக்கக் களைத்தா
னின்றலகா னெப்பொழுது மிப்படியே யெனரு
னென்னுரைப்பே னெதுகேட்பேன் யான்செயலென் னேடி. (௨)

ஒன்றெனவு மிரண்டெனவு முரைப்பதனை மறந்திங்
குழையிழத்தல் பொருணிலையென் றோதுவருள் ளதுவோ
வென்றனக்கீ தருளுமையா வெனவிரந்து கேட்டே
னெனையன்றிப் பிறகாணே னிரண்டெனல்பொய் யாங்காண்
நன்றிதுகா ணூமைகளோ ஞானிகளூற் பகரா
நானிலையென் றுரைப்பவனூர் நானதனு லொன்று
யென்றுமுளே னுரைததாலு முரையாத விடத்து
மென்செயநா னெனையொழித்தற் கெனநகைத்தா னேடி. (௩)

ஐம்புலனை யொடுக்கிமன மடக்கிச்சவம் போன்று
றல்லாமன் மற்றையர்க ளறிஞரல வென்பார்
நம்புமெனக் கிதுதெளிய வுரையுமென நகைத்து
நானறியே னிவையாவு நீயறிவாய் போலு
மம்புவியிற் றுயில்வோர்கண் மூர்ச்சையினுற் கிடப்போ
ரறிஞரெனி லிவராவா ராச்சரியக் கதைகா
ணும்பரயன் சிவன்மாலுஞ் ஜனகரோடு விதுர
ருலகளித்தார் ஞானிகளென் றுரைத்திடுநூற் கொள்ளே; (௪)

கொள்வதெங்ங னும்முரையைக் கோடிகற்ப காலங்
குருவியினங் கூடமைத்துக் குஞ்சியினில் வாழ
வுள்ளொளியாம் பதமேவி யுடன்மறந்தா ரெனவிங்
கொருநூலே யலபலவு முரைத்திடலே னென்றே

னுள்ளதுகாண் பின்னுலகிற் றிரிந்தனரோ வில்ரோ
வுலவுங்கான் ஞானியோவஞ் ஞானியோசொல் லென்றான்
கள்ளமறற ஞானியென்றே னந்நிலையே நன்றாங்
கழலாத நிலையிதது கழலுமென்று னேடி. (௫)

அன்பர்பணிக் காளாகி லின்பநிலை வருமா
மருமறைதேர் தவிற்பயனே ரணுவுமிலை யென்பா
ருன்றனக்குஞ் சம்மதமோ வருட்குருவே யென்றே
னென்றையென்றுப் பிதற்றலிதா முணவின்பொருட் டறியார்
நன்கறிந்த குருவாகிற் சுருதியுத்தி யாலே
நாசமுற வறியாமை யோட்டியறி வூட்டிக்
குன்றலிலா மறையுரையி லென்னுரையி லுன்றன்
குற்றமற்ற வனுபவத்திற் குறைவெதுகே ளென்பான்; (௬)

கேளேனுன் பத்திதரு முத்தியென்னிற் சிவமேன்
கேளென்றார் மாணிக்க வாசகரைப் போதங்
கோளறவே னருச்சுனருக் கரியுரைத்தார் கீதை
குருவிவர்க ளவர்களினுங் குறையிறந்தார் போலும்
வாளாபல பிதற்றுதலே னறியாமை யறிவான்
மாயுமலான் மற்றொன்றான் மாயாதிது சரதம்
வேளாண்மை தவந்தானங் கடவுநிதி ஞானி
வியனடிக ளகத்தூய்மை விளைத்திடன்மெய் யுணரே; (௭)

உண்மைதனைத் தெளிவதற்குக் குருமொழிநன் னூலு
முயர்சத்திய நடைகிராசை யொடுசாந்தியும் வேண்டும்
புண்ணியவா னெனனு மிவைபழகா னேகின்
பூரணத்தின் வாழ்வருளச் சிவனுனு மாகா
தெண்ணமென்ன மற்றவரா லிதுவருமென் றிசைக்க
வெப்படியா மிவனிலையா தவரருளத் தெளிநீ
விண்ணுலகிற் கயிலையோவை குண்டமோசொல் வீடு
விட்டயலற் றிருந்தவிட மென்றனன்கா ணேடி. (௮)

ஞானியெவ ரருட்குருவே குணங்குறிக ளரையின்
னளினமனை யனமெனவே நான்சேர்குவ லென்றேன்
மாநிலத்தோர் பொன்செய்வோர் மகிமையுளோ ருலகின்
மானம்விட்டுத் தசையுண்ணூர் சருகுபலம் புசிப்போர்
வானிடையே பறப்பவர்கள் குளிகையினு னேய்கண்
மாய்ப்பவர்க ளுலகிலுடன் மறையவெளி திரிவோர்
சூனியமா கச்சபிப்போர் முக்காலமு முணர்வோர்
சுழலுறுகாற் றடக்குவர்க ளெனவுரைப்ப ரறியார்; (௯)

அறியிவர்கண் ஞானியலர் மூலிகையான் மையா
லரிதாகுஞ் சாதனையா லருமருந்தாற் செய்வார்
குறியிவைகள் கலைஞான மெய்ஞ்ஞான மலகாண்
கூறிடின்மெய்ஞ் ஞானியிவை விழைவனறிந் தாலுங்

கிறியுரையா னருளைவிடா னெவருமவன் போலக்
   கிடையாத பேரின்பச் சாகரத்தின் மூழ்கக்
குறியுரைப்பா னணுவளவு மோசவெண்ண மில்லான்
   கூடும்வரை யுலகிலுப காரஞ்செய் வானே; (௧௦)

உபகார மல்லாமற் புகழ்வேண்டான் மகிழா
   னொன்றறியா யென்றாலு முளமகிழச் சிரிப்பா
னபகார மொருபொழுது மறந்தேனுஞ் செய்யா
   னாநந்த மேயுருவா யமர்ந்துறைவா னவன்மேல்
விபரீதம் விளைத்தாலுங் கலங்கலன்காண் யாரே
   விண்ணதனை யசைப்பவர்கள் சோதனைக்குத் துணியே
லபசார மவர்பொருத்துஞ் சிவனுனைதண் டிப்பா
   ரரிதவர்கள் சரணடையென் றறிவித்தா னேடி. (௧௧)

வேறு.

ஞானந்தனை யலதுலகிலை முப்போதினு மென்றாய்
   ஞாயந்திட பரிசோதனை சரணம்புவ லென்றேன்
வானெனத்துறை பரிசங்கெட வெம்மை குளிர்மென்மை
   வன்மைகன மின்மைவழு வழுப்பாதி குணஞ்சேர்
தானம்பல பொருளேயுள வாகாவொளி யிலதேற்
   றங்காபல வண்ணங்களு முருவங்களு மிதமாங்
கானம்வகை சொற்பேதமு மோசையல திலைபோற
   காணுவிரு கந்தஞ்சுவை யாறும்புவி புலனே; (௧உ)

புலனன்றியு டம்பும்பல பொருளுந்தெரி யாவாம்
   புலனேபொறி யலதண்டென லாகாவிவை மனமே
யிலதேலிலை மனமேயுல கென்றானை வணங்கி
   யெந்தாயிவை யுண்டாயினு மெதிர்காண்பொரு ளிலவோ
கலதையற வுரையீரென வநகாகன வினிலே
   காணப்படு பொருளின்றியுங் காணப்பட லென்றே
வுடலானது முலகானது நனவென்றுரை ஞான
   மொன்றின்றிய துயிலிற்சக மின்றாகலை யறியே, (௧௩)

அறிவன்றியி லறியாமையு மதுவின்றெனி னன்வு
   மதுவின்றியே பொறியாதியு மவைதந்திடு பொருளுந்
தறிதந்திடு பூமானிக ராமென்பது திண்ணஞ்
   சங்கற்ப விகற்பாதிக டங்கற்கிட மெதுகாண்
குறியாதவி டத்திற்பல கலையும்பல குணமுங்
   குவிதற்கிட மெதுவோவுட லுலகுக்கிட மதுவே
நெறியோமய வுளதோவறி விலையேலிவை வருமோ
   நீயேயுணா யென்றான்சொல வாயற்றன னேடி. (௧௪)

இடைபிங்கலை யிருநாடியி யங்கும்வளி யதனை
   யிடைநாடியி லேற்றுச்சியி லேறும்படி செய்தே
மடைபோல்வரு மமுதுண்டுணை வதுவேண்டில ராகி
   மாறாதுடல் வைப்பார்பெரி யோரென்றுரை பகர்வார்

கடையேனிது தெளியத்திரு வருளேசெயு மெனவீண்
கருமஞ்செய வேண்டேனுரு காக்கிற்றுயர் வினைவே
மடமைநிறை மதியானை மறுத்தற்கிவை போல்வ
வைத்தாரறி வாளர்சொல வித்தாரமி தாமே; (௧௫)

ஆகுந்தனை யறியாதுட லாவானைவி லக்கற்
கடயோகமி லயமந்திர மாதித்தொழி லதனாற்
போகும்வளி போகம னிருத்தக்கெடு மனமே
புரணச்சுகம் வருமாலுடல் போகாதிதி னின்றோர்
தேகந்தனை மடவார்கன லேறக்குழி சேரார்
தேராதுட னீறாகிடும் வாராதரு ளென்றோர்
மோகந்தரு மடவார்சுக மொழியாவகை யறியா
மூந்தாதொரு பொழுதேயுண வுந்தாமரு ளினரே; (௧௬)

உணவோர்பொழு தேனும்பல வுரிசைவிடு புளியா
லூனேநரை திரையெய்திடு மூப்பாற்றளர் வெய்து
நிணமாதிகள் வேண்டேலென வுணவாதி சுகத்தை
நீத்தாரிவை நீத்தாருட னீத்தற்கறு பிரிவாய்க
கணநாதன யனமாலுரு ததிரனுதிய தேவர்
காப்பென்றறு நிலையுந்தரு கலையுந்திக ழுருவுங்
குணமுந்தொழி லாதிதெளி மனதிற்பட நாட்டிக்
கூட்டைக்கழி புட்போலுயிர் பூட்டைக்கழி வித்தார் (௧௭)

கழியுஞ்சட வுடனீயலை யுணவாய்பொரு டிரிபே
காற்றேவலை யுலகின்னிறை காற்றுமன மெனிலோ
ஒழியுந்துயி லினினீயிதை யுணர்வாய்மன முதலா
மொன்றாயினு மலைநீயுனை யன்றியிவை யிலையால்
விழியாவரு மொழியக்கெடு மழிவில்லறி வாகி
யென்றுந்திரி யாதிங்குறு மெவையுந்தெரி வானீ
பழியாம்பிற வினைநீங்கென வருள்வாரிவை யோரார்
பகருங்கரை பற்றார்க்குறுஞ் சுகமென்றன னேடீ. (௧௮)

ஐயமகற்றல முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௧௩௬,

---

## நின்றநிலைகூறல்.

உடல்பொருளா விகளளிக்க வுபதேசஞ் செய்துவந்தா
ருயர்ந்தோ ருந்த
னுடல் பொருளே யன்றென்ற னுடல்பொருளா வியுமுலகு
மூனதாக் கொண்டு
கடல் புடைசூ ழவனிமுதற் காண்பனவெல் லாநினைவாய்க்
கவலை யற்று
விடல் கொளலாம் பொருளின்றிப் புரணசுகி யாகென்றான்
விளங்கி னேனே. (௧)

ஆண்டபெனி ரண்டுனையாஞ் சோதித்துப் பொருளருளு
மருள்வே மென்பார்க்
காண்டவன்செய் யேவரனு ரல்லாமற் சுகமருளா
ரல்லே னெல்லாங்
காண்டகைய வறிவேநீ கணமுமிலை தெரிவித்தோங்
காண்ப வற்றைக்
காண்டுலக்கத் துளங்கவுனை யலதுளதோ வயலெனயான்
காண்கி லேனே. (௨)

கண்ணாடி முன்னமொரு கண்ணாடி வைக்கவிரு
கண்ணா டிக்குட்
கண்ணாடி யலதுபிற களங்கவற்றில் வாராபோற்
காண்ப வற்றைக்
கண்ணாடிக் களங்களியா வகமுகமாய் மனவாடிக்
கணமே தோன்றுந
கண்ணாடி யேயிருசக்க கண்ணாவா யெனப்பிறநான்
காண்கி லேனே. (௩)

எப்பொருளை யெப்பொருளெவ் விடத்தெவ்வா றுணர்வதனு
யெதும் பந்த
மெப்பொருளைப் பொருளையெவ்வா றுணர்வதனல் வீடெய்து
மென்றுன் காணு
மெப்பொருளுந் தானாகு மறிவுவுண்மை தன்னைவென்
றெண்ணற் பந்த
மெப்பொருளுந் தனையன்றி யிலையெனல்வீ டெனக்கண்டே
னிடரற றேனே. (௪)

இல்லவற்றை யுள்ளவெனக் கொண்டுகுணங் குறிபேத
மிசைததார் யாரு
மில்லவற்றை யுள்ளவெனக் கொண்டாயா திருசதலினு
லிசைப்பா னேன்பின்
னில்லவற்றை மாயைதநத தாய்மாயை யில்லையெனி
லிசைப்ப தென்யா
னில்லதுள்ள தாய்விளங்க லறிவொன்றே யென்றுன்மெய்
யிதுகண் டேனே. (௫)

உள்ளதனை யுள்ளபடி யுணருதலே மெய்ஞ்ஞான
முளதி ருக்க
வுள்ளனவா யிலாதவற்றை மேற்கொடுயின் னொழித்திலே
னொழி யஞ்ஞான
முள்ளதெனிற் போகாது பிரமையும்வத் துவேயயலிங்
கொன்றின் றென்று
முள்ளதெனி லுணர்வன்றிக் காட்டென்று னென்றுகி
யுளாயற் றேனே. (௬)

சித்தாகு முன்னினைவா லன்றியுட லுலகாதி
திகழ்வ தெங்ஙன்
சத்தாக வல்லதசத் தாகவிவ கரித்திடுமோ
தருக்க மெங்ஙன்
சத்தாசுத் தம்பத்தி சுகாசுகமாய்ப் பரிணமிக்குந்
தொழில்க ளெங்ஙன்
பித்தாகி யலைவதென்னீ யுரையென்ற னெனையன்றிப்
பிறகா ணேனே. (எ)

முச்சுடர்மூ வுலகுமூ வவத்தைமுத்தே கம்விளக்கு
முதலே தொன்று
மச்சொருபா நந்தசர்வ சாட்சியறி வன்றோநீ
யதனாற் காணு
மிச்சொருபங் களிலொன்றுந் தேகநா னென்றுபிறந்
திறந்தே னென்கை
பிச்சலவோ வெனவச்ச மற்றுயர்ந்து பிறப்பிறப்பைப்
பிழைத்திட் டேனே. (அ)

பிறப்பேதிங் கழியாத வான்மாவே தானாகிற்
பிரிந்து சேரு
மறப்பேது மறப்பகற்று மார்க்கமே தவையுணர்ந்து
மறையே தெல்லாந்
துறப்பேது துறவாமை யேதுமனஞ் சொற்பொருளுந்
துன்பத் தஞ்சும்
பறப்பேது பொய்வெறும்பொய் யாமனத்தின் கூடுதென்றான்
பரப்பற் றேனே. (கூ)

நிட்டைமந்தி ரம்பூசை தூக்கசுக மீரவத்தை
நிலையோ நீகை
விட்டிடுக பாழாகு மனமுதல நிதநின்னையின்
விட்டொன் றாகிற்
கட்டமின்றிக் காண்பொருட்போய் மனமிறந்து பிறவிமயக்
கறுவா யென்று
னட்டசித்தி வேண்டியலை துட்டமனச் செருக்கொழித்திங்
கறிவா னேனே. (க0)

மனமதுஜீ வேசஜகத் தாகியழித் திடலறியார்
மந்தி ரத்தான்
மனமதனை வயமாக்கும் வகையருள்வே மென்றுரைப்பார்
மதிவல் லார்காண்
மனமயக்கே மந்திரந்தே வதைநிட்டை சித்திமுதன்
மதியென் றான்பின்
மனமறலோ வென்றேன்சத் துவமாய்ச்சே டித்தலென்றான்
மயக்கற் றேனே. (கக)

நின்றநிலைகூறல முற்றிற்று.

ஆக செய்யுட்கள் உ0எ.

## கைம்மாறு காணேனெனல்.

இதுநன் றிது நன்றல வென்றுகொ
ளெவையுந் துயர் தந்திடு மூன்றிகழ்
வதுநின் னினை வன்றியி ருந்தில
தயருங்கன வில்வர லென்னினை
யெதுவென்செயு முன்னினை வின்படி
யியலுந்திக ழுந்துயி லின்மன
மதுநின்றிட நின்றில தொருவனு
வறியென்றவ ருக்கெது வெதிரடீ. (௧)

பதியும்பசு வுந்திர மென்றுளர்
பதகன்றனை கண்டவ னன்றொரு
மதிதந்திட வந்திவை நனவினின்
மறையுந்துயில் வந்தவி டந்தனி
விதிலையமெ மகிலை முப்பொரு
ளெதுவுண்டெனி லுண்டிவை நின்னறி
வதுகொண்டறி பொருணிலை யலசட
மறியென்றவ ருக்கெது வெதிரடீ. (௨)

உடல்பொய்யுற வென்றறி வித்தவ
ருணாசற்றுணா தந்து தமக்கொரு
மடமும்பசு வுங்கிண கண்டல
வகைபத்திய வத்துக ளுங்கொடு
சடமிங்கொரு தெய்வமெ னத்துதி
சடையன்குரு வன்று பிழைக்கிலர்
விடமுண்டவ ருடனசை விடுவென
விடுவித்தவ ருக்கெது வெதிரடீ. (௩)

அறிவென்று தமைத்தெளி வுற்றய
லறவனுதின மதனி னிலைத்தவர்
தறியொத்த வுடற்குடை கற்குறை
தருவித்தறை கட்டி முடிக்கிலர்
பிரிவற்ற வகண்ட நிரஞ்சன
பிரமந்தனி லுடல்பொரு ளுய்த்தவர்
குறியுஞ்சொலி யுடல்விட நினைவது
குறைவென்றவ ருக்கெது வெதிரடீ. (௪)

தனையன்றி யனுத்துணை யும்பிரி
தறிகின்றவர் முற்றறி வுற்றிலர்
நினைநல்லரு மறைமுத லியகலை
நிறைவென்பது நினைவற லெனுமென

வினையவர்பிற ருள்ளம றிந்துரை
யதுசெப்புவ ரென்பது தப்புரை
தினையளவய லறிவுற லறிவல
திரிபென்றவ ருக்கேது வெதிரடீ. (௫)

உலகந்திர மன்றென வும்பல
வுயிருந்திர மன்றென வுந்துயர்
நலனுந்திர மன்றென வுங்கொடு
நரகுந்திர மன்றென வும்படை
நிலமுந்திர மன்றென வுஞ்சொலி
நினைமனதினை நிலைமை யெனக்கொளி
னலனெங்குறு மதுநிலை யன்றெனு
னன்றென்றவ ருக்கெது வெதிரடீ. (௬)

வேறு.

அவரவர்நினை வலதொரு பொருளினை
யறிகிலரடை கிலர்துயர் சுகமென
வெவரெதுகரு தினுமது வலதிலை
யெதிர்தருபொரு ளிடுகையி தறிகிலர்
கவர்தலையொழி கிலரொழி குவர்நிலை
கதிவரநிஜ மெனவறி குவரவர்
தவர்தலைநினை வதுநல னலவிது
தவிரென்றவ ருக்கெது வெதிரடீ. (௭)

வேறு.

அயனரியர னிந்திர னிமையவ
ரருமறைதவ முனிவர்கள் சித்தர்கள்
வியனுலகு திருப்பதி கள்வினை
விலகச்செயு நதியுயர் விதிகதி
துயர்தருநம னிரவிநி லவுசநி
துருவன்முத னிலையல வெனவெது
பயனறிவு சுயம்பல மனமெனல்
பதமென்றவ ருக்கெது வெதிரடீ. (௮)

பற்றற்றவர் கற்றவர் நற்றவர்
பற்றறவரு ரிற்றவர் தற்றெளி
முற்றுற்றவர் தெற்ற லறுப்பவர்
முற்பட்டவ ருற்பவ மற்றவ
ரிற்றற்றல் பெருமை வியந்திட
விவர்தற்பரர் சிற்பரர் ஜைபல
கற்றென்னினை வற்றிலர் பெற்றிலர்
கதியென்றவ ருக்கெது வெதிரடீ. (௯)

### வேறு.

குழைகிழியரி படர்மதர் விழிசெங்
குமுதங்கனி துவரித ழுடர்வின்
மழைபுரைகுழன் மணநறு முகைபொன்
மலேகிர்முலே யுடைமட மயில்பன்
கழைமதுகனி ரசமொழி தருவெங்
கவலேயிலழி குவமெனு மொழியென்
பிழையொழிமன நினைவரு வழியுன்
பித்தென்றவ ருக்கெது வெதிரடி. (௧௦)

கைம்மாறு காணேனெனல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் உ௧௭.

---

## சித்தர்நூன் மயக்கொழிதல்.

### வெண்பா.

பொதிகைமலேச் சித்தர்தம் பூம்பதங்கட் சேவித்
திதமகிதந் தேர்ந்த திசைப்பேன்—மதிவல்லோய்
பேசரிய சித்தன் பெருமையைக்கே ளுதமுனி
பாசமற வென்றசொற்கைப் பற்று. (௧)

பற்றறுந்த பேர்க்கே பரகதியுண் டாமலது
பற்றகலார்க் கென்றும் பதைப்பேகாண்—பற்றெதுவோ
வென்னி லறிவன்றி யேதுமிலே யென்றூர்சொற்
றன்னேவிடுத் துன்னுந் தமம். (௨)

தமமெதுவேன் முன்பின் றமையுடலாக் கொள்ளுஞ்
சுமடர்தமை நம்பியவர் சொல்லாற்—றமதுமல
மூத்திரத்தை யுண்டுலே மூப்போதும் வைப்போமென்
ரூத்திரத்தாற் கொள்ளவல மாம். (௩)

அவலமென வீதை யரைவானேன் ஞாலத்
தெவரிருந்தார் சாகா திசைமி—னவரொங்கே
கண்ணரவ தாரங் கழிந்தனவேன் மற்றையரை
யெண்ணுவதேன் மிக்காரோ வில் (௪)

இல்லேயெனிற் சித்த ரிறவாரென் றெந்நூலுஞ்
சொல்லுவதே னென்னிற் சொலக்கேணீ—தில்பலவாய்
நிற்பதற்கே யாசையிங் நீணிலத்தார்க் கென்றறிந்து
பற்றகலச் செய்யுபா யம். (௫)

உபாயமே தென்னி லுயிரறியார் யாருஞ்
சுபாவத் துடரூனாய்ச் சொல்வ—ரபாவமிது
வானாலுந் தனனுடலில் யாரே வெறுப்படைவார்
வானாட ரேனும் மதி. (௬)

மதியாரென் றேயுடலில் வைப்பித்தா ராசை
புதிதா முறவுமதம் போக்க—விதியிலையென்
றெண்ணாதே நூற்றே டிணகக மறிந்திணங்கு
பெண்ணே மிருத்துவெனப் பேண். (௭)

பேணா திறந்தார்கள் பேய்மக்க ளீயுடலை
வீணா யவர்க்காய் விடலென்றே—காணாய்கொல்
நாதமுண்ணா விந்துவிடே னன்மூச்சைக் காயிழைப்பாய்
சாதலுறா யென்றார் தகைத்து. (௮)

தகைப்பான் புகலேன் றமையறிவாக் கண்டிங்
குகப்பா னிறைந்துண்மை யுற்று—வகத்தெளிவாய்ப்
பூரணத்தி னின்று புறம்பகமற் றுப்பயநி
வாரணத்தால் வாழ வறி. (௯)

அறியா ரிதனை யருந்திமல மாதி
பெரிதென் றதையுகந்து பேசித்—தெரியாத
போர்க்குரைத்துக் கெட்டுப் பிறரைக் கெடுத்துடலைப்
போர்க்குவித்தார் மண்ணாற் புதைத்து. (௧௦)

புதையாத முன்னரோ பொன்செய்வ மென்று
கதைபலவுஞ் சொல்லிசெயக் கண்டே—னதுபோன்ற
பொன்னுலகிற் காணேனான் பொய்யென்னில் வாகடமேன்
மண்ணுலகின் மெய்யா மதி. (௧௧)

மதியென்று தாம்ரபற்ப மான்மியமுஞ் சான்றோர்
பதிமகிமை பொய்க்காதை பன்னிக்—கதியற்றிங்
குண்ண வகையின்றி யொருமெய்ம் மருந்திற்கும்
விண்டிரந்துஞ் சொல்லார்கள் வீண். (௧௨)

வீண்மண்பெண் பொன்னுடலி னாசை மறையுரைக்குங்
காண்பனவெல் லாமழியுங் காரணத்தாற்—சேண்போனாங்
காண்போமே நித்திரையிற் கற்றவற்றி னுற்றவற்றின்
மாண்பெதுவோ தன்னறிவே மாண். (௧௩)

மாண்புடைய வள்ளுவனார் மாநிலத்தா யௌவையா
ராண்டகைசேர் சங்கரா சாரியார்—வீண்சுமையென்
றிவ்வுடலை விட்டொழிந்தா ரென்னில் விடேமென்பா
ரெவ்வலியா லோதுவரோ விங்கு (௧௪)

இங்கிவர்கள் வித்தையா லின்றவத்தால் யோகத்தாற்
பொங்கி வழிந்தார்கள் போலுமவர்—தங்களிலு
நித்திரையி னில்லா நிணவுடலை நீடேழி
யெத்திறத்தால் வைப்பா ரிசை. (கரு)

இசையா வுரைநம்ப லெப்பொழுதுந் தப்பாம்
வசைவருமென் றஞ்சேல் வராது—நிஜமுணர்ந்தோ
ராசீர் வதிப்பா ரலாருரைக ளென்செய்யுஞ்
சீச்சீ யொழியவர்வாய்ச் சித்து (கசு)

சித்தென்ப தோவறிவு சித்த னறிவானேன்
பொத்தவுடற் காப்பவனோ பொய்பொய் பொய்—சுத்தவறி
வாகத் தனிதஞே யகண்டப் பெருவெளியிற்
சோகமற வாழ்வோன் றுணி. (கஎ)

துணிவதென்றன் சொல்லாலே யன்றகத தீச
முனியருண்மூந் நூறுதத்வ முற்றும்—பனியகற்றும்
பார்த்தாற்சை தன்னியநூற் பாடிவைத்தார் கொங்கணரும்
பூர்த்திசெய்யுஞ் சந்தேகம் போம். (கஅ)

போமென்ப தார்க்குலகிற் பொய்ச்சொலாப் புண்ணியர்க்கே
தாமெடுத்த வோடே தரத்துணிந்து—சாம்பிணமே
ராகபலி யிட்டருத்தி யன்பரென நம்பமனம்
வேகவைக்கும் புல்லருக்கோ வில். (கக)

இல்லிவர்க்குச் சித்திமுத்தி யில்லைபத்தி யெள்ளளவு
மில்லைகாண் மான மிரக்கமிவை—கொல்வேடர்
தன்னிற் கொடியார்பொய்ச் சந்நியாசி சொன்னம்பே
லுன்விதியென் செய்வமென்பா னுன். (௨௦)

உன்னுமற் கெட்டோ ருலகிலின்று நாளையுமுண்
டன்னுர்பொன் னாற்பிழைத்தா ரார்காணும்—பின்னுமல
வமுரிதழைக் கற்பமுண்டிங் காடென்றி யொததா
ரமுர்தமுற்ற பேரெவரோ வாய். (௨க)

ஆயாம னன்கை யநாதரித்து நம்பிடுவோர்
நாயா யலைந்து நடுக்கமுற்று—வாய்காய்வா
ராசைசொல்வான் யாவ னவனேசு தன்யமன்கா
ணாசைவிட்டா னுசா னறி. (௨௨)

அறிமயிலே சித்தர்நூ லாதியந்தம் பாரா
வெறியர்பொன் னாசையால் வீணாய்க்—கரிசுட்டு
மாள்வார்பின் சித்திபெற மங்கையரை வாலையென்று
தாழ்வா ரவரடிக்கீழ்த் தான். (௨௩)

தானே யறிவென்றுந் தற்பரனென் றுஞ்சொன்ன
தேனேகைக் கொள்ளா ரிதனினும்—வான்றிரியுஞ்
சித்திபெறி தன்றெனவே செப்பிடுநூ லாயாருக்
கெத்தனைசொன் னாலுமென் னாம். (௨௪)

என்னும் வசிய விடுமருந்தால் வையகத்தோர்
தன்னை வசமாக்கத் தாமலைவார்—சொன்னபடி
தன்மனது மிந்திரியந் தன்வசத்தில் வைக்கறியார்
பின்னெவரை வைப்பார் பிழை. (௨௫)

பிழைக்கும் வகையறியாப் பேயர்துலாங் கன்னிக்
குழைக்கவருஞ் சித்தியென் றுன்னித்—தழைதின்று
பத்தியத்தைக் காத்துப் பலகாலுந் துன்புறுவா
ரித்தகையார்க் கென்னுரைப்போ மிங்கு. (௨௬)

இங்குலகர் ஜாதகங்க ளேட்டிலெழு திப்படித்துஞ்
சங்கையறு ராகித் தவித்தழுவா—ரெங்கு
மகப்பையரைக் காசேபோ லாவதுவே றின்று
மிகப்பார்த்தென் சோதிடத்தை வீண். (௨௭)

வீணே யுடலாசை வீண்மண்பெண் பொன்னாசை
வீண்டன்னைக் காணா விடம்பூசை—வீணேயாஞ்
சந்தமுஞ் சோதிடமுந் தந்திரமு மந்திரமும்
யந்திரமுங் கற்றென் னிடர். (௨௮)

இடர்துலக்கும் வித்தை யெழிலார்வே தாந்த
முடற்சுகத்தை வேண்டார்க்கீ தொன்று—மடமையால்
வேண்டாது மற்றவற்றை வேண்டியலை வார்க்கிடரே
யாண்டா னிவரடிமை யாம். (௨௯)

அடிமையெவ னாண்டா னெவனையோ பாவங்
கெடுதயிலை யாயாத கேட்டாற்—கொடுநரகுக்
காளாவர் சொல்லை யருளுபதே சமெனவே
வாளாகா லம்போக்கு வார். (௩௦)

வார்பூண் டனத்தாய் மயக்கறலே முத்தியலா
தார்கண்டார் மற்றவற்றை யாயுங்கால்—பேர்மாத்
திரமாகு மேட்டி லிருக்குமெண்ணெண் சித்தி
தரமுத்தி வீணவற்றைத் தள். (௩௧)

தள்ளுதற்குங் கொள்ளுதற்குந் தான்றலைவ னல்லாம
லெள்ளளவுங் காணே மிகபரங்க—ளுள்ளனவே
யானுமா மாகா விடத்துந் தனைமறந்திங்
கேனோ மயங்கலக மின்று. (௩௨)

சித்தர்நூன் மயக்கொழிதல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௨௪௬.

---

## வேயிசை யூதல்.

அல்லற்க டந்தறி வாகிப்பி ழைத்தோருக்
கில்லைம ரணமென் றூதுகுழல்
இகபரம் வேண்டாரென் றூதுகுழல். (க)

வேண்டாமை யன்னவி ழுச்செல்வ மில்லென்று
மாண்டாரு ரைத்தாரென் றூதுகுழல்
மறுப்போர் மடயரென் றூதுகுழல். (உ)

தோற்றம ழைப்புத் துயினன வென்றுணர்ந்
தேற்றம டைந்தேனென் றூதுகுழல்
இறையவ ருணேமென் றூதுகுழல். (௩)

தனுகர ணபுவ னபோகம் வேண்டில
ரெனிலிற வாரேயென் றூதுகுழல்
ஈசனே யாவரென் றூதுகுழல். (௪)

சிற்றறி வுபேர றிவிரண் டென்பவர்
கற்றும றிவில்ல ருதுகுழல்
கழலார் பிறவியென் றூதுகுழல். (௫)

பூசையும் வேண்டார்மெய்ப் போகமும் வேண்டார்நி
ராசைவி டாதவ ரூதுகுழல்
அரனுய்த் திகழ்வாரென றூதுகுழல். (௬)

ஆநந்த மோம்பிய லையுந்தொ ழிலறத்
தானேதா னுவாரென் றூதுகுழல்
தரிக்குஞ்சு கமென வூதுகுழல். (௭)

இன்பவ டிவோா மில்லையெ னிற்பள்ளி
துன்பமி லாமையென் னூதுகுழல்
துரியத்தென் றேதுக வூதுகுழல். (௮)

எல்லாம றிவானி றையென்று கண்டதெத
தல்லாதி றையில்லை யூதுகுழல்
அறிவிரண் டில்லையென் றூதுகுழல். (௯)

பொத்தவு டலோர்பொ ருளென்று காவாதோ
ரெத்திறத் தோரேனு மூதுகுழல்
இடருற்று ழலாரென் றூதுகுழல். (௧௦)

சித்திகள் வேண்டிச்சி றுமைய டைபவர்
சுத்தவெ றியரென் றூதுகுழல்
சுகரூப மாகாரென் றூதுகுழல். (௧௧)

தன்னினை யில்லாத்த லத்தீச னேமன்வந்
தென்னேபு ரிவாரென் றூதுகுழல்
இடர்சுக மோராரென் றூதுகுழல். (௧௨)

எத்தேச காலமி ராதோங்கி ஞானந்தஞ்
சத்தேதா ஞகிடி லூதுகுழல
ஜகசாட்சி யாவரென் றூதுகுழல். (௧௩)

சித்தாகுந் தானிச்ச டத்தாற்சு கம்வேண்டன்
மெத்தவ றிவீன மூதுகுழல்
வெகுநாட்ப ழக்கமென் றூதுகுழல். (௧௪)

ஆதார மாகும றிவுக்கோ ராதாரம்
பேதாய்வி ரும்பாதே யூதுகுழல்
பெரிதெத ஞலோர்வை யூதுகுழல். (௧௫)

தற்போத மென்பது தானுட லென்றுன்ன
லற்பர்வே றென்பாரென் றூதுகுழல்
அனுபவ மில்லாரென் றூதுகுழல். (௧௬)

தற்போத நீக்கந் தனைக்கண்ட வாநந்த
சிற்போத நாமென வூதுகுழல்
சிவம்வே றிலையென வூதுகுழல். (௧௭)

வாக்குமன திற்கெட் டாவான்பொ ருடன்னை
வந்தித்தற் காமோவென் றூதுகுழல்
மௌனம்வி டாதேயென் றூதுகுழல். (௧௮)

இக்கால மக்கால மென்பதி லாமலே
யெக்கால மும்வாழ்வோ மூதுகுழல்
இரண்டற் றறிவாகி லூதுகுழல், (௧௯)

மூலிகை யாலேமு யனும்பல் சித்திக்குக்
காலப யமுண்டென் றூதுகுழல்
கலைஞானம் நில்லாதென றூதுகுழல். (௨௦)

வேயிசையூதல் முற்றிற்று.
ஆக செய்யுட்கள் ௨௬௯.

---

## சீர்பாதவல்லபஞ் செப்பரிதெனல்.

எல்லாமு நானு யிருந்திடப் பெற்றே
னிரண்டற் றறிவா யிலகிடப் பெற்றேன்
பொல்லாப்பி றவிக ழன்றிடப் பெற்றேன்
புறம்பக மற்ற புரணத்தை யுற்றே

னில்லாம னதைநி றுத்திடப் பெற்றே
னிறைவுங் குறைவு நினைவாகப் பெற்றேன்
வல்லவ னாதமு னிக்குரு நற்றாள்
வழங்கிய பேறென் வழுத்துக தோழி. (௧)

சத்தாயு லகசத் தாகவும் பெற்றேன்
ஜகந்துக்க மாயழி யாவின்ப முற்றேன்
சித்தா யுலகு சடமாகப் பெற்றேன்
சிவனாகித் தோற்ற மவமாக விட்டே
னித்திய னாகி நிஜாநந்த முற்றே
னிலையா விடய சுகம்யாவு மற்றேன்
றத்தொழி நாதமு னிசகுரு நற்றா
டருபே றுரைக்குந் தரமல்ல தோழி. (௨)

முக்கால மற்ற முதலாகப் பெற்றேன்
முடைநா றுடல்யா னெனல்விட்டு விட்டேன்
சிக்கறச் செத்து சாகாமனம் பெற்றேன்
சிறுமை பெருமை வெறுமைகை விட்டே
னெக்குறை யுந்தீர்ந் தெனின்மொக்க முற்றே
னெனக்கேன்வை குண்டங் கயிலைகை விட்டேன்
சக்கரு ணாதமு னிதந்த நற்றா
டருபே ருவகைக் கரணேது தோழி. (௩)

என்னிலே யெல்லா மிருக்கவும் பெற்றே
னெவற்றுள்ளு நானின் றிருக்கவும் பெற்றேன்
பின்னிலன் முன்னில னாகவும் பெறறேன்
பிறப்புமி றப்பும றப்புங்கை விட்டேன்
றன்னிலே தானா யிருக்கவுங் கற்றென
சமாதியி தென்றசங் கநிலை பெற்றேன்
மன்னிய நாதமு னிக்குரு நற்றாள்
வழங்கிய பேறக் கொழிவேது தோழி. (௪)

ஆதார மாறுங் கடந்திடப் பெற்றே
னறுசம யங்கள சத்தாகப் பெற்றேன்
பூதாதி ஞாலம்வெண் டேரெனப் பெற்றேன்
பொறிபுல னாதிய றிவாகப் பெறறேன்
வேதாந்த மௌனம் விளங்கிடப் பெற்றேன்
விருப்பு வெறுப்புஞ் சலிப்புங்கை விட்டேன்
ருதாவா நாத முனிக்குரு நற்றா
டருபே றிசைத்தற் கரிதறி தோழி. (௫)

அகம்பிரம மென்றே யனைந்திடப் பெற்றே
னறிவறி யாமை யகன்றிடப் பெற்றேன்
சுகந்தேடல் விட்டுச் சுகநிறை வுற்றேன்
சுஜாதிவி ஜாதி சுவகத மற்றேன்

றிகம்பர ளுகித் திகழொளி பெற்றேன்
றிணையைந்து பான்மூ விடங்கெடப் பெற்றேன்
மகத்தாகு நாத முனிதந்த நற்ருள்
வழங்கிய பேறு வரம்பற்ற தேடீ. (௬)

சரியை கிரியை தவம்யோகம் விட்டேன்
சதாசிட்ட ளுகித் தனினிற்கப் பெற்றத்
துரியப ரம்பொரு ளாகவும் பெற்றேன்
றுயர்சுற்றஞ் சொன்மாத் திரமாகப் பெற்றேன்
பெரியார்சி றியாரெ னும்பேத மற்றேன்
பிரிவுஞ்செ றிவுங்கு றைவுங்கை விட்டே
னறிவாக நாத முனிதநத நற்ரு
ளருளிய பேறுக் களவேது தோழி. (௭)

அவத்தையோர் மூன்று மகன்றிடப் பெற்றே
னதீதவ கோசர ளுகவும் பெற்றேன்
பவத்தைப்பொய் யாக்கிப் பயங்கெடப் பெற்றேன்
பதரென் றெமன்கா லதூதரைக் கற்றே
னெவற்றிற்கு மாதார மாமெனைப் பெற்றே
னெனகென்னை யன்றித் துணையறப் பெற்றேன்
றவநிறை நாத முனிதந்த நற்ரு
டருபேறி தென்முன் றவப்பே றென்னேடீ. (௮)

இரவும்ப கல்பொய்த் துறவுங்கை விட்டே
னிடம்பொரு ளேவன் மடங்கெடப் பெற்றேன்
பரமென்னை யன்றி யிலையாகப் பெற்றேன்
பரதேசி யென்னும்பொய்ப் பாசாங்கை விட்டேன்
சிரமொட்டை தாடி சடைவைத்த லற்றேன்
சிரமாம றிவைக் குறியாகப் பெற்றே
னரனுக நாத முனிதந்த நற்ரு
ளருளிய பேறென் னளவது தோழி. (௯)

நினைதநபொ ருளெதிர் நிற்கவும் பெற்றே
னினைப்பன்றி வேறென்று நில்லாமை பெறறே
னெனைப்பெற்ற தல்லா னினைப்பாக வேறென்
றிலையென்று நானே யிருந்திடப் பெறறே
னனைத்திற்கு மாதார மறிவெனப் பெற்றே
னறிதல றியப் படுபொரு ளற்றே
னெனைத்தந்த நாத முனிதந்த நற்ரு
ளிணைதந்த பேறென் னிசைக்கவென் றேழி. (௧௦)

சீர்பாதவல்லபஞ் செப்பரிதெனல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௨௭௧.

## திருச்சாழல்.

முன்னுரைத்த வேதாந்த முழுதுணர்ந்து மோமறுத்
தின்னல்சமு சாரர்க்கறை யேறிலரி தென்னேடீ
தன்னைவிட்டு முன்னிருப்பர் தமைக்கணித்து வலகுநிலை
பின்னமெனை வழங்குவரிற் பிரமையுற்றோர் சாழலோ. (க)

ஆரணங்க ளாகமங்க ளாருயிருக் கணைந்தபரி
பூரணனே ருருவுகொடு போந்தவித மென்னேடீ
பூரணனு ருருவுகொடு புகலவெளி போந்திலனேற்
சீரணமா மறைபொருளுந் தெரியாகாண் சாழலோ. (உ)

எப்பொருளுந் தாமாக விருந்துமறை யெவர்தெளியச்
செப்பினரோ வறியேனித் திறமறிய விளம்பேடீ
எப்பொருளுந் தாமாக விருக்கவென்று மில்லையெனச்
செப்புமறி யாமைவருந் திரிபறுக்கச் சாழலோ. (ங)

ஓதிபிறர்க் குரைப்பரலா லோத்துணர்ந்து தம்மில்னு
பூதிநிலை பொருந்தியிகப் புகரகலா ரென்னேடீ
ஆதியந்த மாகவொன்றை யாய்ந்தறியா ரிடையிடைசென்
றோதிபுத்தி மருண்டுணவிற் குளபவரூர் சாழலோ. (ச)

பேதையரும் பெரியவரும் பிரளயத்தொன் றாகின்மறை
யோதலுரை தெளிதலில்வந் துறுபயனென் னுரையேடீ
பேதையரில் பெரியருமில் பின்னிலைமுன் னிலையுலக
மாதியந்தம் பிரமமெனு மறுதிவரச் சாழலோ. (ரு)

எல்லாஞ்சி வன்செயலென் றிசைத்துமறை யிருநிலத்து
நல்லார்போல் லாரெனவே நாட்டல்வகுத் தென்னேடீ
எல்லாம வன்செயலென் றிருக்கநல்லர் செயலிறந்திங்
கல்லாரில் லாமயல்கொண் டழுங்கறப்பிச் சாழலோ. (சு)

மனமிறந்த பின்னர்முத்தி மருவுமெனக் கேட்டோதித்
தனைவிடுத்துப் பிறவுருவந் ததையவுன்ன லென்னேடீ
இனையனென விருக்குந்தனை யேட்டிற்பிற ரிசையிலன்றி
மனமறிய வாய்ந்துணரா மறதியினுற் சாழலோ. (எ)

யார்க்குமுயி ருடலுணவ வத்தைபய மொன்றாகப்
பார்ப்பானும் பறையனெனப் பகரும்பகுப் பென்னேடீ
பார்ப்பவன் பார்ப்பான் பார்க்கப் படுபொருள்க ளயலறவோத்
தார்ப்பான்வாய்ப் பறைபறைய னறியெனற்குச் சாழலோ. (அ)

ஈசனெனச் சீவனென விரண்டுரைத்து முடிவின்மறை
பேசினுமொன் றெனக்கோடல் பிசகலவோ புகலேடீ
யீசனுஞ்சீத் துயிர்களுஞ்சீத் தென்னிலொரு சித்தினுக்கா
பாசம்வரு மின்றெனிலோ வஜடம்பொறி சாழலோ. (கூ)

நினைவையன்றித் துக்கசுக நிற்கவிட மறியார்க
டனைச்சுகவான் மாவெனவே தவிப்பகலா ரென்னேடீ
வினைக்குரிய பயனைமறை விதிப்பதுணா ரார்மொழிக
டனைக்குறிகொண் டறுதியெனத் தருக்குறலாற் சாழலோ. ()

பேசாத நிலையருளும் பெரியனைப் பேணாதுலக
வாசாரக் கள்ளருககா ளாருவரி தென்னேடீ
வாசாம கோசரனும் வத்துபெற வருந்தவங்கட்
கூசாதி யற்றுகிலாக் கொடுங்குணத்தாற் சாழலோ. (௧௧)

திருச்சாழல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௨௯௦.

---

## குருசொருபங்கூறல்.

---

உலகேழு மேழுநிறை பலகோடி கோடியுயி
ருடலாதி பொருளகம் புறமண்டு சோதியெது
பலபேத போதகலை யுணர்வாற் றொடர்ந்தறிய
பலகான்மு யன்றறித லரிதென்றி டைந்தடியர்
குலமேவி யகமமன த யறவீழ்ந்தி ரைஞ்சியுளா
குறிகேட்டு யர்ந்தவர்க ளுருவுண்ட டர்ந்ததெது
விலதாகு முலகமெதி ருளதாக தருவதெது
விதுபோத குருசொருப மெனவோது மருமறையே. (௧)

திருமாப கத்தன்வளா தருமாதி டத்தன்கலை
திகழ்நாவ கத்தன்மறை யுளாநாவ லத்தர்முனி
யுருவாமு டற்றிகழு முயர்ஞான சோதியெது
வுருகாரு ளத்துநிறை மருளாந பாதியெது
தளாநீரு மாயுருவ மருவாஞ்ச தாகதிவிண்
டவரேற்று மிருரூப வெரியாகி யலவாகு
நிறைவாக்க கந்தொடர வரிதாநி ௨ ) ✝ தவெது
நிஜபோத குருசொருப மெனவோது மருமறையே. (௨)

வெளியாதி பூதமெழு வகைபேத பௌதிகமை
விதகோச மோடுபொறி புலன்வாயு நாற்கரண
தளையாற்க ளைத்தயருங் களிசேர வித்தைவரு
தமர்தார வாசைமலி மும்மலங்கே டாதவுயி
ரளியாற்க ளைந்திருமை வினைதீர வேண்டியுனு
மதுகாறு மவ்வியக் தமுமாகி நின்றெவையு
மொளியாமெ னககுறைசெய் பரியாய நாமமென்
வொளிர்போத மெதுகுருவி னுருவீதெ னுஞ்சுருதி. (௩)

அறமாகி யளவையறு வருளாகி நின்றதெது
வசலஸ்வ பாவமெது வழியாவ தீதமெது
மறமேம லிந்தகொடு மறவோருளத் தொழிவின்
மருளே நிறைத்தழிவின் மருளற்று யர்ந்ததெது
திறமாகி நின்றதெது திரியாவி யற்கையெது
திரிகால மாகிபல திறமாய்ச் சொலிப்பதெது
துறவோ ருளத்துநிறை துரியப்ர போதமெது
சுயஞான மெதுவமல குருரூப மெனுமறையே. (௪)

குருசொருபங்கூறல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் உகச.

---

## சொருபாநந்தக் கொம்மி.

பந்த குணங்கட் பறித்தவனே பவ
பாச மயலைக் குலைத்தவனே யென்னை
நொந்து கெடாமற் றடுத்தவனே யாதி
நூங்கறி வோயெனக் கொம்மியடி. (க)

மூச்சக மாக்கித் துடைப்பவனே பல
மூர்த்திகள் வேடம் படைப்பவனே யம
னச்சத்தை யோடப் புடைப்பவனே யறி
வாநந்த னேயென்று கொம்மியடி. (உ)

பன்மை யொழிக்கும் பராபரனே யேக
பாவங்க ளிக்குங் குணாகரனே மாயை
வன்மை விழுங்குஞ் சுதாகரனே யாதி
வானறி வோயென்று கொம்மியடி. (௩)

பிறப்பெனும் பேதமை கொன்றவனே ஜீவ
பேத மிறத்தனி நின்றவனே யென்
மறப்பைக் கெடுத்தவிர் மன்றவனே யாதி
மாணறி வோயென்று கொம்மியடி. (௪)

எல்லை யிறந்த வருளொளியே விபு
வேகமே வாத்துவி தக்களியே யென்றன்
றொல்லை மறைத்தப் பரவெளியே ஞான
சோதியே யென்றுநீ கொம்மியடி. (௫)

சத்துச்சித் தாநந்த நித்தியனே சர்வ
சாட்சிச் சொரூபனுஞ் சத்தியனே யென்ன
வித்தைக் கெடுத்தொளிர் மத்தியனே ஞான
விண்ணுரு வோயென்று கொம்மியடி. (௬)

எங்கு நிறைந்திட ரற்றவனே மன
மென்னு மடிமையைப் பெற்றவனே யூ
னெங்க மிடமாக வுற்றவனே யறி
வாநந்த னேயென்று கொம்மியடி. (எ)

காரண காரிய மற்றவனே யாருங்
காணு வருளுரு பெற்றவனே யெங்கும்
பூரண னாய்நிற்கக் கற்றவனே யாதி
போதனே யென்றநீ கொம்மியடி. (அ)

நானெனுஞ் சொற்பொரு ளானவனே ஜக
நாதனெ னப்பெயர் போனவனே யாவு
மானவ னேயல வானவனே சுக
வானவனே யென்று கொம்மியடி. (௯)

சுத்த மசுத்தங் கடந்தவனே யதி
தூராதி தூரமி டைந்தவனே சுக
நித்திய வாரி குடைந்தவனே ஞான
நின்மல னேயென்று கொம்மியடி. (௧0)

முத்தி நிலத்தின் முளைப்பவனே சூழ
மோனநல் வேலி வளைப்பவனே நாளுஞ்
சித்சுக போகம் விளைப்பவனே கன
சின்மய னேயென்று கொம்மியடி. (௧௧)

பேதம பேதமி றந்தவனே வேதம்
பின்னிடத் தேடிக் கரந்தவனே ஞேய
ஞாதுரு ஞானந் துறந்தவனே சுய
ஞானியே யென்றுநீ கொம்மியடி. (௧௨)

புண்ணிய பாவம் விளைத்தவனே யுயிர்
பொய்யுட லேறக் கிளைத்தவனே யாவுந்
தன்மய மாக்கித் திளைத்தவனே சித்
சதோதயனே யென்று கொம்மியடி. (௧௩)

ஜாதிகு லங்க ளிறந்தவனே சுய
ஜாதிவி ஜாதி துறந்தவனே யந்த
மாதியு மாகி நிறைந்தவனே பர
மாநந்த னேயென்று கொம்மியடி. (௧௪)

நித்திய னாகி நிலைப்பவனே தோற்ற
நிற்கவி டாது கலைப்பவனே யெனை
சுத்தனே யாக்கிப் பலிப்பவனே சிற்
சுகோதயனே யென்று கொம்மியடி. (௧௫)

சொருபாநந்தக் கொம்மி முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௯0௬.

---

## அன்னைப் பத்து.

வேதப் பறையர் விரக ருயிருண்ணு
நாத ரநாதிய ரன்னேயெனும்
நாதரே நாதமு னியாகி வந்தெமக்
காதர வீந்தன ரன்னேயெனும். (க)

பத்தர்க் களிக்கும் பதத்தர் தமைவிழை
சித்தர்க ளெளியர்கா ணன்னேயெனும்
சித்தத் திருந்துந் தெரிகிலர் முன்வந்து
முத்தி யளித்தன ரன்னேயெனும். (உ)

என்றும் பிரியா வியல்பினர் யாராலு
மொன்றற் கரியர்கா ணன்னேயெனு
மொன்றற் சரிய ருருவாகி யென்னில்யா
னின்றிடச் செய்தன ரன்னேயெனும். (ங)

தேடுவர் தேடித் திரியத் திரியாரைக்
கூடிப் பிரிகில ரன்னேயெனுங்
கூடல்பி ரிதலி லர்பல்லு ருத்தோற்ற
வேடிக்கை காட்டலா லன்னேயெனும். (சு)

மெய்யுரு வொன்றிலர் வேண்டும் பலவிதப்
பொய்யுரு வேற்பரா லன்னேயெனும்
பொய்யுரு மெய்யுரு வாக்கிமெய்ப் போதந்தந்
தையம றுத்தன ரன்னேயெனும். (ரு)

இந்திர ஜால மியற்கையிற் செய்பவர்
மந்திர மோதில ரன்னேயெனும்
வந்துல கேக நனவிற் றுயிலிற்செய்
தந்திர மோதில னன்னேயெனும். (சா)

நில்லாத தோற்ற நிலையென் றுணர்வார்க்குப்
பொல்லா மயலீவ ரன்னேயெனும்
பொல்லா மயல்கெட வேண்டி லெமதுரு
வெல்லாமென் றேலென்ப ரன்னேயெனும். (எ)

யாரு மறியா வியல்பின ரேயெனைத்
தேரத் தெளித்தார்கா ணன்னேயெனும்
தேரு மனதிற் கறிவாகி நின்றவர்
கோரின செய்தலா லன்னே யெனும். (அ)

இல்லதை யுள்ள துளதில தாக்கிடும்
வல்லமை யுள்ளவ ரன்னேயெனும்
வல்லவர் நாதமு னியுரு வாய்வடி
வில்லைா மக்கென்று ரன்னேயெனும். (கூ)

எப்பொருள் சுட்டினு மெய்ப்பொரு ளுமிலை
யப்பொரு ளென்பர்கா ணன்னையெனு
மப்பொரு ளாகிய நிந்தது வாய்நிற்ப
தெப்பொரு ளோவென்று ரன்னையெனும். (௪௦)

அன்னைப்பத்து முற்றிற்று.
ஆக செய்யுட்கள் ருகக.

---

## புராணசாரக் கலிவெண்பா.

பொருளா யழியாத போதமாய்ச் சாந்த
வருளே திருமேனி யானான் - பெருங்கருணைச் (க)

சாகரமாய்ச் சூழ்வான் ஜனன மரணமெனு
மோகமறு மெய்ஞ்ஞான பூமிகட்குத் - தாகமா (உ)

யன்பரக மஞ்ஞை யகவவா நந்தநட
மின்பவின்சொற் பெய்ய வெழுமேகந் - துன்பமிகு (ந)

மாறாப் பவப்பிணிக்கு மாற்று மருந்தளித்துத்
தேராமுன் கையைவிடாச் சித்தனும் - யாரும் (ச)

பகுத்துணர வாகா பரவபர ஞானந்
தொகுத்து வகுத்துரைக்குஞ் சூரன் - மகத்தென்னுஞ் (ரு)

சொற்குப் பொருளாய்ச் சுகத்திற் கிருப்பிடமா
யற்பமதக் கான்றனக்கு வக்கினியாய்த் - தற்பதத்தைத் (சா)

தேராத கள்ளத் திருட்டுக் குருக்கடமை
யாராய்ச்சி சாலை யடையரசன் - பார்மீது (எ)

தத்துவசங் கத்தின் றலைவனாய் மெய்ஞ்ஞான
வித்தை பயிற்றியின்ப மேவுவிப்பான் - சுத்தபர (அ)

வத்துவா யெஞ்ஞான்றும் வாசா மகோசரனா
யத்து விதனா யமர்ந்திருக்கும் - வித்தகனா (கூ)

நாதமுனி யென்றிசைக்கு நாமத்தான் றன்பால்யான்
போதல் புரிந்தேனென் புண்ணியத்தால் - வேதன் (க0)

வருக வருகவென வாய்மலர்ந்தா னெத்தென்
றுருகுமே யின்றுமதை யுன்னின் - றிருகறுக்கு (கக)

நெஞ்சத்தான் பண்டித ரேநெடுநா ளாய்க்காணும்
வஞ்சகனென் றேநீர் வராதொழிந்தீர் - இஞ்சந் (௧௨)

தயவுவைத்தா லென்போல்வர் தன்னியரா காரோ
வுயரறிவர்க் கென்று னுரைப்பன் - செயலறியேன் (௧௩)

கற்றவரை யேற்றுங் கருத்தறியே னன்சிறியேன்
குற்றம் பொருத்தல் குணமென்று - னுற்றசையாச் (௧௪)

சித்திரம்போ னின்றேன் சிரித்தேதோ நிற்கின்றீர்
சித்தமுற்று வீற்றிருங்கள் சேதிசில - மெத்தநா (௧௫)

ளாக வறிய வடியே னினைந்திருந்தே
னேகராய் வந்தீரி தென்பாக்யம் - பாகவத (௧௬)

மாதிப் புராண மறைந்த வியாசரிவை
யேதா தரவா லிசைத்தார்காண் - போதமுற்ற (௧௭)

தத்துவத்தைக் காதைசெய்து தந்தனரோ கேட்டவற்றைப்
புத்திகொண்டு பாவாற் புனைந்தனரோ - சததியமாய்க் (௧௮)

கண்ணாரக் கண்டே கதைக ளெழுதினரோ
விண்ணுஞ்சிற் கண்ணில் விளங்கியதைப் - பண்ணுருவாய்ச் ()

செய்தனரோ தத்துவத்தைத் தேர்ந்துநங்கை சூத்திரர்க
ளுய்ய வுருவகித் தோதினதாய் - மெய்யுணர்ந்தோர் (௨௦)

சொல்லத்தாங் கேட்டதாய்ச் சொல்லுகின்றார் சோதித்த
வல்லவர்க ணீரிதனின் வாய்மைதனை - பல்விதத்துஞ் (௨௧)

சங்கையறச் சொல்லிச் சழக்கறுப்பீ ரென்றும்பா
லிங்கிதனைக் கேட்டே னிதுசிற்க - மங்காத (௨௨)

வேத முபநிடதம் வியனு கமமிருதி
யாதிநூ லிங்கிருக்க யாதுபற்றி - யோதினரோ (௨௩)

விப்பதி னெண்ணு மிரும்புரா ணங்கடமைச்
செப்புமுன்னர் சூத்திரர்க டேர்ந்தநூ - லிப்புவியில் (௨௪)

யாதோ விலேயே லவர்க்கென் றிவர்மறையை
யோதல் வெளியாக வொவ்வுமோ - வீதிருக்க (௨௫)

வைங்கணைபூ வாம்வண் டதுநாணும் விற்கரும்பா
மங்கையரே சேனையா மாங்குயில்க - ளெங்கும் (௨௬)

வரவுரைக்குங் காகளமாம் வான்றேராந் தென்ற
விரவிற்கு நாயகனு மிந்து-பரவு (௨௭)

குடையாங் கிளிப்பரியாங் கொண்டகொடி மீனு
முடையா னெவர்க்குமய லூட்டி-யடையவே (௨௮)

கடலுலகை வெல்வனுங் காணே மவனைப்
படையாதி யிங்கிருக்கப் பார்ப்போங்-கடிமலரா (௨௯)

லாடவனை யன்றி யரிவையனை யுங்காமன்
சாடன் முறையாமோ தம்படையே-யேடறிந்தோர் (௩0)

திங்கள் குடையாமோ தென்றல் விமானமோ
விங்குருவ கஞ்செய்தா ரென்றுரைப்பார்-சங்கையுண்டோ ()

சித்தஜன் சித்தத் துதிப்பவனல் லாலுளனோ
புதிமா னேநீர் புகலுவீ-ரித்தனையோ (௩௨)

ரங்கத் துதித்தொடுங்கு மங்கஜனை யல்லாம
லெங்குணாந்தீ ரங்கமிலா வில்லானை-பொங்கொலிநீர் (௩௩)

மூவுலகு முண்டுமிழ்ந்த மூர்த்திக்குப் புத்திரனு
மேவளோ பெற்றாளை யானறியேன்-பாவலரே (௩௪)

மந்தரமே மத்தாக வாசுகிதாம் பாற்பிணித்திங்
கந்தரத்து தேவ ரசுரர்களு-முந்திக் (௩௫)

கடையவரு தெள்ளமுதுங் கஞ்சத்தோர் மாதும்
புடையோ ரிரதியெனும் பெண்ணுங்-குடையான (௩௬)

சந்திரனே யாதிபொரு டந்ததாம் பார்க்கடலின்
றெந்த விடத்தி விருக்கிறதோ-வந்தோ (௩௭)

திருமாதை தந்தை திருமணஞ்செய் கால்பின்
வறுமாதை மாரன் மணக்க-விருவரையு (௩௮)

மெந்தமா ரன்கணைக ளெய்திவனை வென்றானே
வந்தமா ரன்பிறப்பை யானறியேன்-சந்திரன்முன் (௩௯)

னில்லையோ செய்யா ளிரதி முதலானோர்
புல்லறிவேற் கீது புகலுவீர்-தொல்பொருளின் (௪0)

றில்லையோ லும்பூகோ ளப்பரப்பை யிந்நாளில்
வல்லவர்க ளாய்ந்து வழக்கறவே-யெல்லைமை (௪௧)

லேறக் குறைய விருபதுகோ டிச்சதுர
மீறென்றூர் காணேம்பா லென்கடலை - யாரியர்கள் (௪௨)

பொய்யுரைப்ப ரோகாண் பொருளே ழிளகலென
மெய்யே யருளினரிம் மேதினிமே - லையமின்றி (௪௩)

யெங்கும்பா னெய்தே னிலவணநீர் நன்னீர்க
டங்க வுருவகித்துத் தாமென்பர் - பங்கமென்னே (௪௪)

பாற்கடலை யீசனொரு பாலனுக்கீந் தாரெனல்போல்
யார்க்குங் கொடுத்திருத்த லாரறியார் - பாற்கொண்டே (௪௫)

யெல்லா வுயிரு மிருநிலத்தில் வாழ்கின்ற
தல்லாமற் காணே மறிந்தவிவை - தொல்கடல்வே (௪௬)

றுண்டாயி னெங்குளவோ வோது மூவர்க்கடல்போற்
கண்டாரைக் காண்டாரைக் காணயான் - பண்டிதரே (௪௭)

தேவ ரரக்கர்முனி சித்தர்வித் யாதரர்கள்
பூவுலகிற் காணேமே போனதெங்கே - மேவுங் (௪௮)

கயிலை மகமேரு காணே மிமய
சயிலத்தே கங்கை ஜனிக்குங் - குயின்பனிக (௪௯)

ளல்லாம லாகாய கங்கைவே றுண்டாமோ
வெல்லா முணர்ந்தீரே யீதிசையு - மல்லாமல் (௫0)

வாணியென்பாள் கற்றவர்கள் வாயாங் குளத்தூறும்
பாணிவரு நாக்கமலம் பற்றிநின்று - வேணநூல் (௫௧)

பாடநாங் கேட்போமே பண்டிதர்பால் வேதாவைக்
கூடல் பிரிந்தவிதங் கூறுமையா - வேடகற்றி (௫௨)

மேருவில்லாய் நாணரவாய் வெங்கணைமா லாயிரதம்
பாராக வேதம் பரியாகச் - சாரதியு (௫௩)

நான்முகனே யாக நகையாற் புரமெரித்தான்
கூன்பிறைசேர் கூத்தனென்பர் கூறுதேர் - மானுலக (௫௪)

மொன்ரோ பதினான்கோ வொன்றெண்ணின் மற்றவற்றை
யன்று சுமந்தவரா ராயோமே - நின்றவுல (௫௫)

கேழேழு மென்னி லிதிலடங்கு முப்புரமும்
பாழாக்க லெங்கே பகருவீர் - வீழா (௫௬)

வெழுதா மறைடரியா மென்ப துருவகமே
பழுதல்ல வென்பர் பயின்றோர் - முழுமணிசேர் (௫௭)

சேடன் மகமேரு சென்றழுத்து நாளுலகைச்
சூடிச சுமந்தவரார் தோன்றுதே - சேடனென்பான் (௫௮)

பாறகடலின மீது பரந்தாம னுககணையாய்
மேறகிடநதா லோதமெதன மேறகிடகரும் - பாற்கடலோ (௫௯)

டாலிலையுஞ் சேட னருந்தவமார்க் கண்டன்முதன்
மேலிருநதால் விணடு விழுஙகியதென் - பாலுருவச (௬0)

சநதிரனை யீசன் றரித்தரென் பாரெநத
சநதிரனோ வன்றாகண டன்னையோ - வந்தமிலா (௬௧)

வாதிப பரம னறக்கண்ணா லங்கஜனைப்
பூதியாய்ப் போகப் புரிநதாற்போன - மாதேவன் (௬௨)

முப்புரஙக ணீறுகக முன்னவையாண டாரதம்மைத்
தபபிலாத தனனுருவிற சாத்துதலபோ - லெப்பொழுதும் (௬௩)

போல வெழுநதுமதன் பொய்யுருவ கததிரிய
ஞாலமேல் விட்டாறபோன் ஞானிகளுங - காலனையுங் (௬௪)

கொன்றெழுப்பி விட்டிக குவலயததே வாழ்கின்று
ரெனறுரைபபா நலலோ ரிசையுமோ - வென்றிவைபோ (௬௫)

லெண்ணிறந்த கேள்வி யிசைததா னவைபகரக்
கணமணியே யினறெனககுக காலமில்லை - நுணணறிவன் (௬௬)

றன்னை வலங்கொண்டு தாட்பணிந்து புண்ணியாக
ளின்னவித மாயுரைப்பா னேனெனறேன் - முனனோர்கள் (௬௭)

தததுவததைக் காதைசெய்து தந்தாரகள் வேறின்று
புததிமா னுகிற புகுநதுபா - ரததனையும. (௬௮)

யோகஞா னங்க ளுணர்ந்தவரைக் - கேட்டுணரின்
மோகமற்றார் செல்லெல்லா முண்மையாங் - தேகநா (௬௯)

னென்றுணருங் காறு மிவற்றின் பொருண்முரணு
மெனறவறறைக் காட்டியீ டேற்றினு - ஞெண்டொடியே (௭0)

யுத்தி யனுபவங்க ளொவ்வ பிரமனுறை
சததியலோ கந்தான் றலையென்றும் - மத்தான (௭௧)

மந்தரங்கீழ் மூலமென்று மாமேரு மூக்கென்றுஞ்
சந்திரா தித்தர்கள் சட்சுவென்று - மிந்த (௭௨)

விதமாக வேழ்கடலு மேழ்மலைபூ லோகம்
பதினான்கு தேவர்களும் பாம்பும் - மதிமுதலாங் (௭௩)

கோளு மரக்கருங் கோத்தபூ தங்களிவை
யாளும்விண் டீச னயன்முதலோர் - நாளு (௭௪)

முடலுயிராய் நிற்பரென வுண்மை கருட
னடல்விண்டு வைக்கேட்க வன்னார் - திடமா (௭௫)

யறிய கருடபுரா ணம்ப்ரேத கட்ட
மிருபதெனு மத்தியா யத்து - விரிவாக (௭௬)

வோதினா ரென்றுலக ரோர்ந்து மயலறவே
வேதம் விரித்த வியாதனு - ரோதியுள்ளார் (௭௭)

பத்தி விராகம் பரஞானம் யோகமிவை
சித்தமுறச் செய்யவெண்ணித் தேர்ந்தோர்க - ளுத்திகொண்டு

கற்பனைய லங்காரக் காதைகளைச் செப்பியிடை
பற்பலஞா யங்களும் பகர்ந்துளார் - நற்குணங்க (௭௯)

ளெல்லாம்வந் தெய்த விவற்றை யுணராதார்
சொல்வாத மேபுரிந்து சோருகின்றா - மெல்லியலே (௮௦)

யெச்சொல்லு மாய்த விடர்துலைந்திங் கஞ்ஞான
வச்சமறற் கன்றே வனைவதென் - மிச்சமாய்ச் (௮௧)

சொல்லவெனக் கிச்சையில்லை தோலா மறைமுதலாம்
பல்கலைசொல் லஞ்ஞானப் பற்றறவே - நன்னா (௮௨)

ளுருவகித்துச் சொன்னவைக ளொன்கதைமெய் யேனுந்
தருபொருளைக் கொள்கதையைத் - தள். (௮௩)

புராணசாரக் கலிவெண்பா முற்றிற்று.
ஆக செய்யுட்கள் ௪௦௨.

---

## திருவுந்தி.

பாவனை நீதம் பதியமுய லேல்சருவ
பாவனீ யாகிநில் லுந்தீபற
பரமபர முனதுருவ முந்தீபற. (௧)

கடலில்வரு மலைதிவலை நுரைநிலைக ளதுவாங்
கணக்கன்றி வாராபோ லுந்தீபற
காணிலறி வேநினைவு முந்தீபற. (உ)

சத்துச்சித் தாநந்த மோடகண் டக்குணஞ்
சாருமுனில் கணடமே துந்தீபற
சாற்றலறி யாமயக் குந்தீபற. (ங)

கானலிடை நீரில்லை கனவறிவி லுலகமில்லை
கற்பனை நாசமே துந்தீபற
காண்பொருளு நீயாகி லுந்தீபற. (௪)

உலகொடுயிர் பரநனவு கனவுதுயில் சாட்சியா
யுறைவதறி வேயென்னி லுந்தீபற
வொழிப்பதெதை போவதே துந்தீபற. (ரு)

தேருமுன் றோர்ந்தபின் றோர்ந்துதே ராப்பொழுதுந்
திகழ்வதது வதுவாக வுந்தீபற
திரஞான சொருபமென் றுந்தீபற. (சா)

அவிரோத வவிகார வான்மாவே நீயென்னி
லவைவதெதை நிட்டையா லுந்தீபற
வறியார்க ளறியார்க ளுந்தீபற. (எ)

சத்திசிவ கூறுரு மென்புதசை சேருடலின்
முதநிமுத னீயாகு முந்தீபற
முனிபிருங் கியேசாட்சி யுந்தீபற. (அ)

ஒன்றுநீ யலையுன்னை யன்றியொன் றிலையெனற்
குறுதுயில் கனவுகரி யுந்தீபற
வொருவரைக் கேட்டலே னுந்தீபற. (௯)

ஆலரூக் குமகார ணப்புர மெரித்தகப
வாலமமர் கண்டனீ யுந்தீபற
வதீதவறி வாகையா லுந்தீபற. (௧௦)

முக்குண மனச்சூல மூடமா ஞணுவ
மத்தகய முனிவுபுலி யுந்தீபற
மறித்தசிவ வறிவுநீ யுந்தீபற. (௧௧)

நனவிலுயிர் பஞ்சபூ தமுமிரவி சசியட்ட
கனமூர்த்த மாயொளிர்வை யுந்தீபற
கழிவை துயி லத்தனித் துந்தீபற. (௧௨)

வாதியுல காமுதலை வன்றேக வபிமான
போதமே யானைநீ யுந்தீபற
புகழாதி மூலவறி வுந்தீபற. (கங)

கனவிலுல குனிலுநன வினிலுலக மதிலுனைக்
காண்டலாற் கண்ணனீ யுந்தீபற
கரிவேறு தேடலே னுந்தீபற. (கச)

மூவுலக முத்தேக முயிர்மா வலிமனுஞ்
சேவடிக டுரியமா லுந்தீபற
தேவர்நற் குணமெனு வுந்தீபற. (கரு)

ஆவிலையு மாமைவயி றரவுகுண் டலியுணவு
மேலைமார்க் கண்டன்மூச் சுந்தீபற
விண்டுதுரி யப்போத முந்தீபற. (கசா)

உலகமுண் பாய்துயிலி லுலகளப் பாய்கனவி
லொப்பரிய நனவதனி லுந்தீபற
உனையன்றி மாலேதிங் குந்தீபற. (கஎ)

முற்பகலி லுலகாக்கிப் பிற்பகலி லவைபோக்கிக்
கற்பவரை நிற்கையா லுந்தீபற
கமலாச னனுமாவை யுந்தீபற. (கஅ)

ஆதார மாறுமுக மாகசத் துஞ்சித்து
மனையவரு மின்பநீ யுந்தீபற
வயலல்ல சண்முகனு முந்தீபற. (ககூ)

தேவமுனி பைசாச ருரகர்சித் தர்மனிதர்
தேகிநீ யாகையா லுந்தீபற
திகழ்கண திபனுமை யுந்தீபற. (உ0)

தேசமொடு காலவஸ் துப்பரிச் சேதமறு
மீசனைவ னவனேநீ யுந்தீபர
விதுதத்வ மசிகருத் துந்தீபற. (உக)

தேகநா னென்றுகொண் மோகமக லாதளவு
மேகமெனல் காணுதென் றுந்தீபற
விதுவுமறி வலதில்லை யுந்தீபற. (உஉ)

ஜீவனு னென்றுனும் பாவமக லாதளவு
மாவதிலை யாவுமொன் றுந்தீபற
வதுவுமய லாகாதென் றுந்தீபற. (உங)

பிண்டத்தி னுள்ளதே யண்டத்தி லாயாத
பேயர்சொற் கேட்டலே னுந்தீபற
பெருமறையி னந்தமீ துந்தீபற. (உச)

இல்லையென் னாணையெனை யன்றியோர் பொருளுண்டே
லல்லறீர் துயிலிலெங் குந்தீபற
வறிவன்றி யாவும்பொய் யுந்தீபற. (உரு)

திருவுந்தி முற்றிற்று.

ஆக செய்யுட்கள் சஉஎ.

---

## நீத்தார்நெறி.

---

எல்லாமெனை யன்றியி லென்பதுபோ
னில்லாவுல கப்பொரு ணேயபுரு
ரில்லாத்துய ரினைசை யுள்ளமிகல்
வெல்வாரிவர் வீடுணர் புண்ணியரே. (க)

அழியாத பரம்பொரு ளாயகில
மொழியாதுணர் வாருரை யற்றுயர்வார்
பழிபாவ மியற்றிலர் பாழ்நசையான்
மொழியாற்றமை மோனிக ளென்கிலரே. (உ)

மலமோய மறைப் பொருண் மாநிலமே
யிலராகி யிருந்துரை யேபகர்வார்
நலனோடிழி வெண்ணி நசைக்குடடா
ருலகோரி னொருங்குண ருண்மையரே. (ங)

தன்னால்வினை யுஞ்சக சிவபர
மென்னாவறி வாரெவ ரெப்பொருளு
முன்னாரொழி யாரவ னானெனவே
பன்னார்பழ வாதனை பாழ்படவே. (ச)

பொறியோடு புலன்கரு மேந்திரியந்
தறிபோன்முடல் வளிகர ணந்தனைதீ
ளொரிவாயுவெ ளிப்பல வீறில்வடி
வறிவாக வடக்கி யடங்குவரே. (ரு)

இன்னாணிது விவனீ நானெனவே
உன்னாகெடல் விட்டொ ரவத்தையள
வென்னாவறி வுற்றிக சாலமுணர்ந்
தெந்நாளு மிறும்பூ தெய்துவரே. (சு)

துன்பின்பிள மைமிகன் மூப்பெளிமை
வென்றிகிறை பொறைமா னமழுக்கா
றென்றிங்குரை யெண்ணில்கு ணங்குணியா
மொன்றிற்கெட வுன்னுவர் யோகியரே. (௭)

பிறவாவிற வாதபெ ருஞ்சுடராய்
மறவாநினை யாதும னங்கெடவே
றறயாவுமி யானென நிற்பர்பிறர்க்
கறமன்றி மறஞ்செய லறிவர்களோ. (௮)

விபுவாம்விம லப்பொரு டாமெனவே
சபலங்கெட ஸபலமு றும்பெரியோ
ரபயம்பெற வருளுவ தன்றிபிறர்க்
குபயந்தரு மொழிசொல வுன்னிலரே. (௯)

இருள்சேரிரு வினைகெட வெற்றினர்பின்
மருள்சேர்மொழி மாநில மேற்பகரா
ரருள்சேர்குரு ரன்றியி லவர்தமொழி
பொருள்சேர்கரை யென்கிலர் பூரியரே. (௧0)

நீத்தார்நெறி முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௪௬௭.

---

## கடைக்கணித்தமைகூறல்.

---

மூன்றொருநா ணாதமுநி முன்னேக வவனெந்தன்
முகக்கு றிப்பா
லென்னையான் மறந்திடத்தி விருந்தாலு மிலாவறுமை
யெய்த லாலே
யின்னல்வடி வாய்த்திகழ்வே னென்செய்வே னிதையொழுத்தற்
கென்றான் கேட்டு
என்னையான் மறந்திவன்பால் வரலெனச்சூழ்ந் தேன்சிரித்தா
னிடைந்திட் டேனே. (௧)

முத்திபெற நற்கரும முயலுமொரு முமூட்சுவினோர்
முன்போய் நின்றான்
சத்தியமே யிக்கருமம் பிறவிதந்து நசித்தேகுஞ்
சாரே லென்றான்
பித்தனோநீ யென்றான்மெய் யெனமறந்து பின்றேடும்
பிராந்த னென்றன
புத்திகொண்டு சற்றசையா திருந்துண்மை யென்றுகன்மம்
புறங்கண் டானே. (௨)

ஆலயத்திற் புகுந்தொருநா ளருச்சகரை வந்தனஞ்செய்
	தடிகாளிந்த
வாலயத்தா ரிருப்பதென்றான் சம்புவென்று ரெங்கென்று
	னதோபா ரென்றார்
காலமுதன் மாலவனை யன்றிதுயில் வந்திடினீர்
	காணீ ரென்றான்
மேலருள்வீ ரெனத்தூக்க மேலென்றான் சயம்புகண்டேன்
	மெய்யென் றாரோ. (௩)

விண்டுவுறை யாலயத்திற் புகுந்தடியே னென்றாங்கு
	வீற்றி ருந்தே
யண்டமுண்ட திருவாயா னமாபள்ளி யெங்கென்று
	னதோகா ணென்றார்
கண்டதின்றே நீதுயிலுங் காலத்தி லண்டமுண்ட
	கதைநீ ரென்றான்
நன்றலநீர் சொல்வதென்று ராயந்தோய்ந்தாற் றெரியுமென்று
	நகைத்திட் டானே. (௪)

கற்றவர்க ளிடையொருசத் விவேகிசில புராணங்கட்
	கழறக் கேட்டாங்
குற்றெதனை யெதுவாக்க முயல்கின்றீ ரெனப்பிறவிக்
	குறைக மர்ந்து
சிற்சொருபந் தனைச்சீவன் சேரவென்றார் பிரிந்ததுண்டேற்
	சேரா தென்றான்
நற்கரும மெதற்கென்று ரிதற்கென்றான் பணிந்துய்ந்தே
	னென் றாரே. (௫)

பெத்தமுத்தி யறியாது பெருங்காப்பி யம்பயிற்றும்
	பெரியான் முன்னின்
றித்தரைமேற் போதிப்ப தென்னென்றான் வித்தையென்று
	ரெதனுக் கோநீர்
புத்திகொண்டு சொலுமென்று னவித்தைக்கென் றார்சிரித்தான்
	விதனைக் கென்றார்
வித்தைகேன் வித்தையென்றான் மறந்தேனென் றார்நகைத்து
	விடைகொண் டானே. (௬)

கடைக்கணித்தமைகூறல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் ௪௪௩.

---

# அனுபவாநந்த தீபிகை.

## இயற்கைநிலைகூறல்.

---

அந்த முதயாத்த மில்லா வெனை
யான்மறந் தேயோ ருடல்வடி வாகி
நொந்து பிறப்பிறப் புற்றேன் போல
நொய்யக் கனவுகண் டேனறி தோழி. (க)

வாக்கும னந்தோட ராதவெனை
வஞ்சகி மாயைது ணைசெயக் காலன்
வீக்கி யொறுத்திட னொந்தேன் போல
வெய்ய கனவுகண் டேனறி தோழி. (உ)

ஆதார மாகும றிவா மெனை
யான்மறந் தோருயி ராக நினைந்தே
வேதா முதலோரா யேததி யேததி
வீண்பாடு பட்டக னாக்கண்டேன் றோழி. (௩)

எல்லா மறியு மறிவா மெனை
யானறி யேனென் றிருமறை யாதி
சொல்லாய்ந் தறிந்தின்ப முற்றேன் போலத்
தூயக னவுகண் டேனறி தோழி. (௪)

இருந்தப டியிருப் பேனை மறந்
தென்னி லுலகுயி ராக்கி யழிக்கும்
பெருந்துய ருக்கிட மாகு மாயை
பெற்றொழிந் தேன்போற் கனாக்கண்டேன் றோழி. (௫)

என்றும் விளங்கி விளக்கு மெனை
யான்மறந் தெங்கெங்குந் தேடிய லைந்தே
பொன்றாக் குரவ னருளா லின்ப
போத முணர்ந்த கனாக்கண்டேன் றோழி. (௬)

மூடந்தெ ளிவுல காதி காணு
மொய்யறி வென்னை மறந்தவை நீரக்
காடாதி யிற்றவ மெய்தி பொய்க்
கழிந்துயந் தேன்போற் கனாக்கண்டேன் றோழி. (௭)

என்று மெனையன்றி வேறோர் பொரு
ளில்லா திருக்கவுண் டென்னு நினைவா
னன்றுநீ தின்பதுன் பங்கள் வந்து
நாச மடையக் கனாக்கண்டேன் றோழி. (௮)

என்றும் பிரியாத வென்னைப் பிரிந்
தின்ப மிழந்தவ னென்னவி ளங்கி
முன்றிகழ் பொய்ப்பொரு ளாய்ந்தே யின்ப
முற்றுரு வான கணுக்கண்டேன் ரேழி. (௯)

என்னினை வென்னில டங்கும் விதமென்று மியல்பா யிருத்தன் மறந்தே
பன்னெறியாலதை மாய்க்கப் பாடு
பட்டொழிந் தேன்பேற் கணுக்கண்டேன் ரேழி. (௧0)

இயற்கைநிலைகூறல் முற்றிற்று.

ஆக செய்யுட்கள் சருக.

---

## நூன்முடிபு கூறல்.

### சடகோபர் வாக்கு.

" சித்தின் வயற்றிற் சிறிதுபிறந் தாலதுமற்
றெதனைத்தின் றெங்கே யிருக்குமென்றார்க் - கத்தைத்தின்
றங்கே யிருக்கு"மென்ற வாழ்வார் திருவாக்குக்
கிங்குரையா மிந்நூலென் றெண்.

### தேவர் வாக்கு.

" ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்"தெனலை - யையமறக்
காட்டுந் தனதிடத்தே கண்டவர்க ளாநந்த
நாட்டமக லார்வாழ்க நன்கு.

மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நி[illegible]
அடையாறு, சென்னை-20.

